# மனத்துக்கினிய

# மலர்கள்


ஆசிரியர் :

திருமால் கவிச்செல்வர், கவிமணி

**S. ரகுவீர பட்டாச்சாரியர்,**

எம்.ஏ., எம்,ஏ., எம்.எட்.,

*மதுராந்தகம்,*





வெளியீடு :

**க. தி. அருள் மன்றம்,**

34, ஜி. எஸ். டி. சாலை,

**மதுராந்தகம் - *603 306.***

**1998**

# இந்நூல் பற்றிய குறிப்புகள்


நூலின் பெயர் : மனத்துக்கினிய மலர்கள்

ஆசிரியர் : திரு. S. ரகுவீரன்,
எம்.ஏ., எம்.ஏ., எம்.எட்.,

முதற் பதிப்பு : 1998

வெளியீடு : க. தி. அருள் மன்றம்.
34, G. S. T. சாலை,
மதுராந்தகம் - 603 306.

தாள் : ஒயிட் பிரிண்டிங்

அச்சு : 12 pt

படிகள் : 1050

பக்கங்கள் : 120

விலை : ரூ. 20-00

அச்சிட்டோர் : ஸ்ரீ தேவி ஆர்ட் பிரிண்டர்ஸ்,
மலைப்பாளையம்.


---

குறிப்பு; இந்நூலின் விற்பனையால் கிடைக்கும் லாபம் முழுவதும் மன்றப் பணிகளுக்குப் பயன் படுத்தப்படும்.

ஸ்ரீ :

# மனத்துக்கினிய மலர்கள்

(அருட் கவிதைகள்)



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய நூல்கள் வெளியீட்டிற்கான உதவித் திட்டத்தின் கீழ் அவர்கள் நிதி உதவியுடன் இந்நூல் வெளியிடப்படுகிறது.

# மனத்துக்கினிய மலர்கள்

## பொருளடக்கம்

ஸ்ரீ :

# உங்களுடன் ஒரு சில மணித்துளிகள்...

மனத்துக்கினிய மலர்கள் வெவ்வேறு சூழலில் என் மனத்துதித்த மனப்பூக்கள். இப்பூககளை மலர்விக்க உதவியவர்கள் எண்ணிலடங்காதவர்கள். என் நன்றிக்கு உரியவர்கள். ஆயினும் முன் வரிசையில் நிற்பவர்கள் ஸ்ரீ உ. வே. குமாரவாடி ராமானுஜாச்சாரியார் ஸ்வாமி, ஸ்ரீ ரிஷிகேசன், ஸ்ரீ பாரதி சுராஜ் ஆகியோர். ஸ்ரீ பாரதி சுராஜ் அணிந்துரை வழங்கியுள்ளார்கள். முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக பாரதி கலைக் கழகத்தின் மூலம் இலக்கிய வேள்வி புரிந்து வருபவர். இனிய நண்பர். ஏற்கனவே அளிக்கப்பட்ட வாழ்த்துரைகள் இணைக்கப்பட்டுள்ளன. [illegible] [illegible], ரிஷிகேசன், [illegible] ஆகியோர் அளித்தவை அவை. கையெழுத்து பிரதி தயாரித்த திருமதி. [illegible], திருமதி [illegible], ஸ்ரீ [illegible] நன்றிகள். திருமால் ஆசிரியர்க்கு எளது தனிப்பட்ட நன்றியை உரித்தாக்குகிறேன். என் கவிதைகளுக்கு இதத்தாய் ஸ்ரீ உ. வே. குமாரவாடியார்தான்.

*ஸ்ரீனிவாஸன்* அருளும் பொருளும் பெறக் காரண மாயிருந்த திருப்பதி தேவஸ்தானத்திற்கும், ஸ்ரீ தேவி ஆர்ட் பிரிண்டர்ஸ் உரிமையாளருக்கும், திருப்பதி ஸ்ரீ A. நடராஜன் அவர்கட்கும் எனது இனிய நண்பர் கட்கும் என் நன்றியினை தெரிவித்து இக்கவிதைக் கோயிலுக்குள்ளே அன்புடன் வரவேற்கிறேன்.

நன்றியுடன்,

**S. ரகுவீரன்,**

26—1—98.

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# என் உரை

## பாரதி சுரராஜ் (இரா. சௌந்தரராஜன்)

கவிஞர். மதுராந்தகம் திரு. எஸ். ரகுவீரன் தொண்டுக்கே கோலம் பூண்டவர். கடுக்கலூர் திருமாலடியார் அருள்நெறி மன்றத்தின் மூலம் திருமால் நெறியை அவர் வளர்த்து வருவதையும், வைணவ அரங்குகளில் இசையுடன் அவர் நிகழ்த்தி வரும் உரைகளையும், மாணவ மாணவியரிடை தெய்வபக்தி வளர, வினாடி வினா, ஒப்பித்தல் போட்டிகள் நடத்திவருவதையும் நாம் அறிவோம். அவர் குரல் ஒலிக்காத வைணவ மாநாடுகள் குறைவு. இத்தனை அலுவல்களுக்கிடையில் அவர் கவிதையை யோக மாகவே பயின்று வருபவர். அந்தக் கவிதைகளும் பெரும்பாலும் திருமாலுக்கே திருமால் தொடர்பாகவே பாமாலையாகச் சூட்டப் பெறுபவை. திருமால் ஆன்மிக இதழில் அவரது கவிதைகள் தொடர்ந்து வெளிவருகின்றன.

அவரது முழுமையான கவிதைத் தொகுப்பு நூல் வெளிவராத குறையை "மனத்துக்கினிய மலர்கள்" கவிதைநூல் போக்குகிறது. மனத்துக்கினிய மலர்கள், தனிப் பாடல்கள், மொழி பெயர்ப்புப் பாடல்கள், எடுப்பார் கைப்பிள்ளை என நான்கு பகுதிகளாக வெளிவரும் இந்நூலில் உள்ள பாடல்கள் எளிய கவிதைகளின் மூலம் புராண, இதிகாச, குரு பரம்பரை, மற்றும் செவிவழி பரவிய அடியார்கள், ஆசாரியர்கள், புராண புருடர்களின் வரலாறு, சாதனைகளைச் சுருக்கமாகவும் அழகாகவும் விளக்குகின்றன.

தம்மைக் கவர்ந்த ஆழ்வார்களின் அருளிச்செயல் அடிகளைப் பின்பற்றி, அதே சந்தத்தில் பாடும் திறமை இவருக்குக் கைவந்துள்ளது.

சொல்லின் செல்வன் அனுமன் படப்பிடிப்புடன் தொகுப்பு தொடங்குகிறது.

*'வலிமிகு உடல்நலம் உடையவன் எவனவன்*
*வளிதரு மகனென ஒளிர்பவன் எவனவன்*
*களிமிகு நலந்தனை அருள்பவன் எவனவன்*
*கதியென அடியிணை தொழுதெழுமனனே*

முதலாழ்வார் மூவரின் சந்திப்பை

*'இருட்டில் தீபமேற்றினர்*
*இன்தமிழ் ஒளிர்ந்தது*
*இறைமையும் இணைந்தது*
*ஈரச்சொல் மணக்கவே.'*

என இவர் பாடுவது நயம்மிக்கது.

இலக்கியங்களிலிருந்து மட்டுமல்ல திரைப்பட மெட்டுக்கள் ஏன் சொற்றொடர்களைக்கூட இவர் கவிதைகளில் உபயோகித்து மெருகூட்டுகிறார்.

*'பூக்காமல் காய்க்காமல் கனிந்தமலர் இது - ஒரு*
*பூந்தோட்டம் பார்க்காத புதியமது இது*
*கேட்காமல் கேள்வி பெற்ற குருகூர் மந்திரம் ஒரு*
*குரு இல்லாமல் உருவெடுத்த உயர்ந்த மந்திரம்.'*

என்ற வரிகளில் நம்மாழ்வாரையே கவிவடிவில் நம் முன் நிறுத்துகிறார் கவிஞர்.

ஆழ்வார்களின் பாசுரங்களில் அமுங்கால் பட்ட இக் கவிஞர் குலசேகரனை

*'மனத்துக்கினியானின் மனதுக்கினியான் இவன்தான்'*
என்று பாடுவதும்

*'ஒருத்தி மகனாய்ப் பிறந்தவராம்*
*ஒருத்தி மகனாய் வளர்ந்தவராம்*
*ஒருத்தியளித்த பாலையுண்டு*
*வருத்தமின்றி வளர்ந்தவராம்'*

என்று இவர் பாடுவது கண்ணனையல்ல. திருமழிசைப் பிரானை. ஆழ்வார் வரலாறு அறிந்தவர்கள் இந்த வரிகளை ரசிப்பார்கள்.

*'அருமைத் தமிழின் வலிமையையே அறிவித்திடவே இவர் பிறந்தார்'* என்று, பெருமாளை பைந்நாகப்பாய் சுருட்டிப் பின்தொடரச் செய்த திருமழிசையாரின் வரலாற்றை இவர் காட்டுகிறார்.

*'மார்கழி, தை எனும் மாதங்களை, மாண்புறச் செய்தவள் நீ'* என்று ஆண்டாளைப் பாடுகிறார். ஏகலைவன் வரலாற்றை இவர் பார்க்கும் பார்வை தனியானது,

*'கல்வியைத் தக்கணையாக்கிய*
*கசடறு சீடனே வாழ்க நீ*
*பெற்றதை இழந்து நீ பெற்றது*
*பெரும்புகழ் அஃதும் ஓர் வெற்றியே'*

இப்படி இந்நூலின் சிறப்பினைச் சொல்லிக்கொண்டே போகலாம்.

கோபிகாகீதம், சுதர்சனாஷ்டகம் போன்ற புகழ்மிக்க வடமொழிப் பாடல்கள் பழகு தமிழில் கவிவடிவம் பெறுகின்றன.

*' தேவை இராமாநுசரைப் போலே தெளிந்த வைணவர் கள் சேவை, சேவை, சேவை, ஒன்றே செய்து சிறந்திடவே'*

என்று இராமாநுசரைப் பாராட்டும் திரு. *ரகுவீரனும்* சேவையின் மறு வடிவம்தான். எந்தவிதமான மாறுபாடும் இன்றி.

*தூப்புல் குலமணியாய்த் தோன்றியவர் வாழ்க*
*தொன்மறையின் மணிச்சுடராய்த் துலங்குபவர் வாழ்க.*

என்று சுவாமி தேசிகரைப் பாடும் இவரது *'நா மணவாளன் மனம் கொண்ட மணவாளன் இவனோ மணியான மொழி கொண்ட உரையாளன் இவனோ'* என்று பொய்யிலாத மணவாள மாமுனிகளையும் விடாது வாழ்த்துகிறது.

இந்த நல்ல கவிஞரின், கவிதைக் கனிகள் உண்ண உண்ண இனிப்பவை. இதற்கு அணிந்துரை எழுதச் சொல்லி என்னைப் பெரிதும் உயர்த்திவிட்டார் கவிமணி. வைணவமணி திரு. ரகுவீரன்.

அவரது கவித்திறன் மேன்மேலும் வளர்ந்து 'காவியம்' படைக்கவும் செய்திட கண்ணன் கழலினையை நினைந்து வாழ்த்துகிறேன்.

# வாழ்த்துப்பா

கவிமாமணி, திருமிகு. **பீஷ்மன்** அவர்கள்

1. பாடுமிசைக் குரல் கொண்டு மனத்தினில்
 பண்ணெழில் யாவையும் காட்டியவா !
கூடும் லயத்தொடு கொஞ்சும் கவிக்குரல்
 கொட்டி யுளங்கள் பிணித்தவனே !
நீடு புகழ்ந்திடும் மூர்த்திகள் கோலம்
 நிகழ்த்தி சுவைத்திறன் காட்டினயே !
கோடி பெறும் கவியின்பம் அளித்தது
 கோடி முறையுனை வாழ்த்துகிறேன் !

2. இந்தத் தலம்பெறும் ஏற்றங்கள் யாவையும்
 இங்கிதமாய்க் கதை சொன்னவனே !
சந்தமும் தாளமும் சாற்றிய காதையும்
 சந்ததமும் உனை வாழ்த்திடுமே !
எந்தவிதம் நினை ஏற்றுவதென் றிவண்
 எண்ணி மயங்கித் தியங்குகிறேன் !
வந்தனம் ! வாழ்த்துக்கள் என்று பலப்பல
 வாயுரை சொல்லி மயங்குகிறேன்.

---

குறிப்பு : இத் தொகுப்பில் உள்ள " அற்புதமே வகுளாரண்யமே " வெளியீட்டு விழாவில் இப்பாராட்டு அளிக்கப்பட்டது.

கம்பன் அடிப்பொடி ஓம் Telephone : 600
KAMBAN ADIPPODI KAMBAN MANIMANDAPAM
10—11—80 KARAIKUDI - 623 002

அன்புடையீர் ! வணக்கம்.

உங்கள் 8—11—80 கடிதம்; நன்றி! தாங்கள் அன்புடன் அனுப்பிய,

*திருப்பாவை - வினா விடைகள்.*

※ *தீராத விளையாட்டுப் பிள்ளை.*

இரண்டும் வந்தன, படித்து மகிழ்ந்தேன்.

மகாகவி பாரதியின் அடிச்சுவட்டிலே, அழகான வரலாற்றுக் கருத்துக்களை, அருமையாக யாத்து, இருபது கண்ணிகளைக் கொண்ட மலர் மாலையாகத் தமிழ்த்தாய்க்கு அணிந்து களித்துள்ளீர்கள். இழுமென் சந்தம் இனிமை பயக்கின்றது ஆலமர் வித்தின் அருங் குறன் ஆனவனை - பெரியவனை, மாயவனை - சிறிய யாப்பில் அடக்கிச் சிறக்கச் செய்துள்ளீர்கள். வாழ்க உங்கள் பக்தி ! வளர்க உங்கள் தொண்டு.

அன்பன்,
கம்பன் அடிப்பொடி

※ இத்தொகுப்பில் இக்கவிதையும் இடம் பெற்றுள்ளது.

# அருள் கூடி ரகுவீரர் வாழ்க

" கவிமாமணி [illegible] "

திருமாலைப் போற்றித் துதி செய்து பாடி
மகிழ்கின்ற பக்தி யாளர்.
இருகாதும் கேட்டுக் கரதாளம் போட
இசைபாடும் ஞான சீலர்.
நறுந்தேனும் நல்ல சுவைப்பாலும் போன்ற
இனிப்பாகும் பேச்சில் வல்லோர்
மதுராந்தகத்தின் தவமேவும் எங்கள்
ரகுவீரன் நீடு வாழ்க.

வருவோரைப் போற்றி விருந்தோம்பல் செய்யும்
மனமோடு வாழும் பெரியார்
அருள்மேவும் சொற்கள் ஜதி மேவிவந்து
அழகாக ஆடி மகிழும்
திருமாலின் ஏடும் இவர் பாடலின்றி
ஒருபோதும் வெளியில் வாரா!
உருவாகும் ஐந்தும் பத்தாகும் ஆண்டில்
அடிவைக்கும் அன்பர் வாழ்க!

திருமாலின் எட்டு எழுத்தான மந்த்ரம்
அமுதாகும் தமிழில் தருவார்
பெரியோர்கள் வாழ்த்த பெருமாளும் ஏற்க
பெருவெற்றி சேர்ந்து பொலிக
திருவோங்கப் பெற்று மகிழ்வோங்கி வாழ்வில்
திடமோங்கி நன்கு வாழ்க
அருளோங்கும் சகல கலை யோங்கக் கற்ற
ரகுவீரர் என்றும் வாழ்க

மனம் சேரும் நண்பர் மதிபோற்றும் செல்வர்
மற்றோர்க்கும் இனிய அன்பர்
தனம் சேர்ந்த பேர்க்கும் தமைச் சூழ்ந்த யார்க்கும்
தனைச் சேர்க்கும் உயர்ந்த பண்பர்
கனம் ஏற்றும் எண்ணம் கடல் தோற்கும் கல்வி
களி சேர்க்கும் கருணைப் பேச்சு
மனம் ஏற்ற வாழ்வில் மனை சுற்றம் சூழ
மகிழ் ஏற்று வாழ்க வளமாய்

தமிழ் கூட்டும் புலமை(வட)மொழிகூட்டும் பெருமை
தகவூட்டும் வேத நூல்கள்
அமுதூட்டும் உரிமை அதை மீட்டும் திறமை
அருள் கூட்ட ரகு வீரனார்
தமதூட்ட வலியால் தமிழ் கூட்ட கவிதைத்
தரம் கூட்டும் நூல் படைத்தார்
இமை கூட வற்றோர் சிரம் கூட்டும் அரியின்
அருள் கூட்ட நெடிது வாழ்க.

கவிஞரின் ஐம்பதாவது ஆண்டு நிறைவு விழாவில்
கவிமாமணி [illegible] அவர்களின் பாராட்டுக் கவிதை.

# அநுமன்

1 வலிமிகு உடல்நலம் உடையவன் எவனவன்
வளிதரு மகனென ஒளிர்பவன் எவனவன்
களிமிகு நலந்தனை அருள்பவன் எவனவன்
கதியென அடியிணை தொழுதெழென் மனனே.

2. விலங்கென விளங்கினன் இலங்கிடும் புகழதில்
களங்கமில்லறிஞர்கள் கருத்தினில் நிலைத்தனன்
இலங்கையையழித்தனன் எரியதன் துணையுடன்
இலக்கவன் அடியிணை இறைஞ்சுமின் தினமே.

3. அரியவன் அடிமையாய் அகமலர்ந்துழைத்தவன்
அரியவன் அருந்தவம் அதன்பொருள் அறிந்தவன்
அறிந்திடு மனைத்தையும் அறிந்திடு மனத்தவன்
அரியதாய் நின்றவோர் அரியவன் துணையே.

4. கதிரவன் கதியுடன் கலைகளை அறிந்தனன்
அதிரதன் அரக்கனின் அடல்வலி தொலைத்தவன்
நிதிமகள் துதிசெயும் நிலைபெறு புகழினன்
விதியதும் உதிர்ந்திடும் துதிசெயென் மனனே.

5. பெற்றனன் மகிழ்ந்தனன் அளித்தனன் மகிழ்ந்தான்
உற்றனன் உருக்கினன் உயர்ந்தனன் ஒளிர்ந்தான்
கற்றனன் களித்தனன் கவிக்குலம் தழைக்க
அற்றனன் அடங்கினன் அவர்க்கடிமையென்றே.

6. தொழுதிடு கரமுடன் துவன்றிடு முடலம்
தொழுபவர் துயரறும் அடியிணை சரணம்
பழுதறு பணியதன் பாதையின் நலமே
பவவினையறுமுனை பணிந்தெழுந்திடிலே.

7. அகிலமுமணைத்திடும் அவனையே யணைத்தனை
சகமிதில் நிலைத்தனை சகலமும் விடுத்தனை
இகமிதில் பரசுகம் இயற்றிடும் பயிற்சியை
இருவெழுத்ததனுளே இயம்பியே இனித்தனை.

8. கரம் சிரம் குவித்துனை வழுத்துவோம் அனுதினம்
களங்கமில் வழியதாய் காவியம் படைத்தனை
அறமுடன் அன்புடன் அறிவுடன் அடிமையும்
அமர்ந்திடும் அழகினை அறிதல் வேறெங்கே.



# முதலாழ்வார்கள்

பொய்கையாழ்வார் காஞ்சியில்
பூதத்தாழ்வார் மல்லையில்
பேயனாரோ மயிலையில்
பிறந்தனர் வளர்ந்தனர்.
கோவலூரில் கூடினர்
கொடும்புயல் இரவிலே
இருட்டில் தீபமேற்றினர்
இன்தமிழ் ஒளிர்ந்தது
இறைமையும் இணைந்தது.
ஈரச்சொல் மணக்கவே

மண்ணெலாம் அகல் என
மாகடல் நீர் நெய் என
வெயிலவன் விளக்கென
விந்தை செய்த பொய்கையார்.
அன்பதே அகல் என
ஆர்வமதே நெய் என
சிந்தையே திரி என
சிறந்த ஞானச் சுடரினை
ஏற்றினார் நம் மல்லையார்.
எங்குமே நல்லின்பமே

## 4

பொய்கை பூத ஒளியதால்
பேயார் பெற்றார் இன்பமே!
பொலிந்ததின்பப் பாடலாய்
பொதிகைத் தமிழ் பொலிந்தது
உலகளந்தான் நிலமதில்
உணர்வே உரமாய் ஆனது.
ஈரத்தமிழை விதைத்தனர்
ஞானமலர்கள் விளைத்தனர்
பாரதத்தின் செல்வர்கள்
பூரணர் இம் மூவரும்
புதிய பாதை காட்டினார்
போற்றுவோம் இம்மூவரை!

# நம்மாழ்வார்

பூக்காமல் காய்க்காமல் கனிந்த மலர் இது - ஒரு
பூந்தோட்டம் பார்க்காத புதிய மதுவிது
கேட்காமல் கேள்வி பெற்ற குருகூர் மந்திரம் ஒரு
குருவில்லாமல் உருவெடுத்த உயர்ந்த மந்திரம்.
அவாவினால் அமுதமன்ன மொழி பிறந்தது
அவாவறும் வழியில் நின்றவன் மொழிந்தது
அவாவறும் வழியைத் தேடியலையும் மாந்தர்கள்
அவாவஃதே கொண்டு நின்று அவனைக் கூடலாம்
மாறன் மாந்தர் சென்ற வழியின் மாறி நின்றவர்
மாலின் மாலில் மயங்கி நின்று மங்கையானவர்
வேதம் விளங்க தமிழில் பாக்கள் விரைந்துயாத்தவர்
விதையாய் நின்று அருளிச் செயலாய் விளக்கமானவர்

மிக்க இறையை மெய்யாம்உயிரை மென்மைமொழியதால்
தக்க நெறியை, தடையைக் கூறி தளர்ச்சி நீக்கிடும்
மிக்க பயனைக் காட்டி நிற்கும் மாறன் வேதமே
கற்கக் கற்க கடையனுக்கும் கதியளிக்குமே.

(வேறு)

காரிமாறன் என்றிடும் கலங்கமில் மனத்தவன்
தேறிநின்றான் தெய்வதம் தெளிந்துரைத்தான் நம்மதம்
பேறு பெற்றார் யாவரே பெரும் புளிக்கிடந்தவன்
பேரு சொல்லி உய்பவர்தம் ஊருசொல்லி உய்வமே

மத்தினால் கடைந்த வெண்ணெய் உண்ணும் ஆசை
கொண்டதால்
தத்தித்தத்திச் சென்று அங்கு தாழியை உடைத்தனன்
எத்திறம் நீ உரலினோடிணைந்திருந்தாய் கண்ணனே
என்று நெஞ்சம் நொந்தவர்தம் இணையடியே தஞ்சமே.

பத்துடையடியவர்க் கெளியவன் அவன் என
முத்தமிழ்க் கவிச்சரம் தொடுத்தனன் துவண்டனன்
எத்திறம் கவித்திறம் படைத்தனன் துதித்தனன்
உய்திறம் உனைத் துதித்து உய்வதன்றி வேறிலை.
வார்த்தையின் திறந்தனை வகுத்துவைத்த மாறனே
சேர்த்தனை செகத்தினில் நின் செந்தமிழ் திறத்தினை
ஓர்ந்தவர் நின்பாடலின் உணர்வினையறிந்தவர்
தேர்ந்தனர் தெளிந்தனர் தெளிந்தஞானம் பெற்றதால்.
சொல்லினால் மணந்தனை. சொலப்படும் பொருளதால்
சொல்லும் வேதமாக்கடல் கொணர்ந்து தேவனாகினை
சொல்லினின்பம் வெல்லும் தன்மை வேறு
கண்டதில்லையான்
சொல்லிச் சொல்லி இன்பம் கொண்டேன்
சொற்களெல்லாம் கொம்புத்தேன்.

காதல் கொண்டு காதலன் தன் காலடிக்கிடந்தவா
காரிமாறன் என்றும் நீயே கற்பதெல்லாம் நின்புகழ்
ஓதல்என்றும் உன்னையன்றி ஓர்ந்திடாத மதுரனார்
ஒப்பிலாத பாதம்போற்றி உய்வோம் வாரீர்,
தொண்டரீர்!



7

# பெரியாழ்வார்

புதுவை நகரதில் உதயம் செய்தனன்
புனித சோதியான் பெரியவன்.

மதுரை நகரதில் மன்ன வையதில்
மாலோன் மாண்பினைக் காட்டினான்.

மாலின் அடியவன் மாலின் மாலதால்
மாலை வாழ்த்தினன், மாயமே!

மாயன் கண்ணனை பேயன் சித்தனும்
மடியில் கிடத்தியே மகிழ்ந்தனன்.

அம்மம் ஊட்டியும், அம்புலி காட்டியும்
அழகுக் கூந்தலை நெருடியும்

அம்மா! என்று நல்லடியார் போற்றிடும்
ஆழ்வார் நம்மில் நற்பெரியவன்.

மாதம் ஒன்றையே மாலுக்காக்கிய
மாதவள் பெற்ற தந்தையார்.

வேதநாயகன் விதிக்கு நாயகன்
வேள்வி நாயகன் உகந்திட

கோதை தந்தவர் கோதில் வைணவர்
குற்றமற்றவர் வாழ்கவே!

பேதையாகிய மேதைதாள்களைப்
போற்றுவோம்! புகழ்ந்தேத்தியே.

# குலசேகரன்

மாசிப்புனர்ப்பூசம் மலர்ந்தது யாராலே?
மாலடியார்க்காகப் பணயம் வைத்தது யார்?
ஏசும் தாயன்றி ஏதுமற்ற இளங்குழவி
இகழ்விக்கப் பட்டாலும் கணவனலால் புகலில்லாள்

கூசாது துயர் விளைத்தும் கோனோக்கும் குடிமக்கள்
கொடுமை செயும் மருத்துவனைக் கொண்டாடும்
-நோயாளன்
கூம்பன்றி கூடறியாதிருக்கும் கடற்பறவை
கொடுங்கதிரால் மலர்ந்திடுமே குவிந்திருக்கும்
-கமலமலர்

வான்மறந்தும் வான்மறவா வளஞ்சிறக்கும் நற்பயிர்கள்
கான்திரிந்தும் கடல்மறவா(து) ஓடிவரும் ஒண்ணாறு
போன்ற பலஉவமை போதிப்பது என்ன?
புகல் ஒன்றே புகலில்லா பொய்மனத்தார்
-நமக்கெல்லாம்

தோன்றிடு நற்சேகரனார் திருமொழியே துணையாகும்
துவன்றிடுவார் துடித்திடுவார் தொல் இராம
-கதை கேட்டே
மீன், குருகு, புதர், ஆறு, செண்பகம் நன் மலைக்குடவாய்
தான் பிறக்கக் காமுற்ற தன்மையதே
-உணர்வார் யார்?

தாயாகித் தாலாட்டு, தயரதனார் தபுலம்பல்
சேயை வளர்த்திடவே இயலாத் தேவகி புலம்பல்
மாயோன் சரிதமெலாம் மன்னன் இனிதாய் உரைத்தான்
மனத்துக்கினியானின் மனத்துக்கினியான்
-இவன் தான்

தேனார் பூஞ்சோலை திருவரங்கச் சன்னிதியில்
சேகனார் தம்நிலை மறந்துகூவும் கிளியாகி
தேனார் நாமமதே ''திருவரங்கா'' எனக்கூவி
ஊனாரும் பிறவி நீத்தவரைப் பணிந்திடுவோம்.

# தொண்டரடிப்பொடியாழ்வார்

மண்டங்குடியில் மார்கழியில்
தொண்டரடிப்பொடி தோன்றி நின்றார்
அண்டம் முழுதும் அளந்ததன்பின்
அரவணை கிடந்து துயில்பவனை
தொண்டர் வாழ்த்திட தொல்லுலகம்
தூய்மையடைந்து சிறந்திடவே
எம்பெருமானே ! எழுந்தருள்க !
என்று பாமாலையைச் சூட்டியவர்
ஊரிலை உறவிலை உறவெனவே
உற்றது மாலவன் மலரடிகள்
காரொளிக் கண்ணனே! காத்திடுவாய். என
கதறிக கதறிக் கவியதனால்
ஊரவர் உணர்ந்திட உணர்த்தியவர்
ஒருவனையே நினைந்துருகியவர்
விமலனை அமலனை விருப்புடனே
கமலமாம் கருத்தினில் இருத்தியவர்
நமதிறையடியவர் தொழுவதுவே
நாரணன் உகந்திடும் செயலதுவே
என நிலை நிறுத்திய வடியவரே
எழிற்திரு மாலையின் மதுவதுவே
தொண்டரடிப்பொடி என்றவரின்
புண்டரிகக் கழல் தொழுதெழுவோம்.

## 10

# திருப்பாணாழ்வார்

அமலனாதி என்றெடுத்து விமலன் தன்னைப்பாடினான்
கமலபாதம் கண்ணில் கொண்டு கண்ணீர்ப்பூக்கள்
சூடினான்
உவந்த உள்ளம் கொண்டவன் உவக்கும்வண்ணம்
நின்றவன்
சிவந்த ஆடைச் சிந்தனை சிறந்துநின்ற செந்தமிழ்
மந்திபாயும் வேங்கடம் மாலரங்கம் தன்னுடன்
சந்திசெய்து நின்றனன் சகமெலாம் புகழ்ந்திட
மதுரமான பாடலில் மங்கைநாதன் திருவயிற்(று)
உதரபந்தம் கண்டு இவ்வுலக பந்தம் விட்டனன்
பாரமாய பழவினை பற்றறுத்த பரமன்தன்
ஆரமார்பில் ஆழ்ந்தனன் அடியனாகி நின்றனன்
வண்டுவாழ் அரங்கந்தன்னில் வாழும் ஈசன் தன்னெழில்
கண்டம் கண்டு காட்டினன் காண்பவர்கள் தேவரே!
ஐய்யனார் அரங்கனார் அலைகிடந்த மாயனார்
செய்யவாய், ஐயோ! இவர் சிந்தைகொண்ட தெத்திறம்!
கரியவாகிப் புடைபரந்த கண்கள் தம்மைக் கண்டுநம்
கரியநெஞ்சம் எரியவைத்த கார்த்திகைக்கு உரியவன்
கண்ணன்போல ரோகிணியில் காலெடுத்து வைத்தவன்
கண்ணில் கண்ணன் அல்லால் வேறுகாணவே
மறுத்தவன்
கொண்டல் வண்ணம் கொண்ட வண்ணன் மனதில்
கொண்டு பாடுவோம்
குலமும் நலமும் குலவும் பாணர் குங்குமப்பதம்
போற்றுவோம்

—( ⁂ )—

# திருமழிசையாழ்வார்

ஒருத்தி மகனாய்ப் பிறந்தவராம்.
ஒருத்தி மகனாய் வளர்ந்தவராம்.
ஒருத்தியளித்த பாலினையுண்டு.
வருத்தமின்றி வளர்ந்தவராம். (ஒரு)

ஒருத்தன் அவனென்று உணர்ந்தவராம்.
உலகுக்கதையே உணர்த்திடவே
விருப்பமுடனே விருத்தத்திலே
கருத்தை விரித்து உரைத்தனராம். (ஒரு)

அருமைத் தமிழின் வலிமையையே
அறிவித்திடவே இவர் பிறந்தார்.
அரியைப் படுக்கை எடு! என்றார்.
அவரும் சுருட்டிக் கொண்டெழுந்தார் (ஒரு)

உரிமையுடனே மீண்டுமவர்
படுக்கை விரித்துக்கொள்! என்றார்
படுத்த நாகணைப் பள்ளியானை
பார்க்கலாம் இன்றும் வெஃகாவில் (ஒரு)

மாயனார் அவர் மகிமையெலாம்
பேயனாரிடம் அறிந்தவராம்
தாயனார் அவர் நமக்கெல்லாம்
தந்தது அற்புதச் சந்தங்களே (ஒரு)

மழிசையாழ்வார் மகிமைகளை
மனதில் நினைத்தே கற்பவர்கள்
பழிசொல் இல்லா(து) பரமபதம்
பற்றி நிற்பர்கள் பழுதின்றி (ஒரு)

# திருமங்கையாழ்வார் - தாலாட்டு

1. அகிலமெல்லாம் மகிழ்ந்திடவே
   ஆலிநாடா! வந்துதித்தாய்
   பகைவரெல்லாம் பணிந்திடவே
   பரகாலனானவனே!
   சுசுமளிக்கும் மறைப்பொருளை
   சுந்தரமாம் செந்தமிழில்
   சகமறியத் தந்தவனே! சத்குருவே! தாலேலோ!

2. நெஞ்சிக்கிருள் நீக்கும் தீபம்
   நெடும்பிறவி போக்கும் போக்கும்.
   அஞ்சுதலை மாற்றியே - நல்
   ஆறுதலை அளிக்கும் தமிழ்
   கொஞ்சும் சுகம் காட்டி எமை
   குதூகலிக்கச் செய்தவனே!
   தஞ்சமுந்தன் தாளிணைகள்
   தமிழ்மகனே! தாலேலோ!

3. வாடி நின்றாய் வருந்தி நின்றாய்
   வருத்தமதைப் போக்கிடவே
   கூடி நின்றாய் குமுதவல்லி
   கொள்கையதால் குலவு செல்வம்
   தேடி நின்றாய்! தேடிக் கண்டாய்;
   தேனொழுகும் திருவடிகள்
   பாடி நின்றாய்! பதமளித்தாய்!
   பாவலனே! தாலேலோ!

4. வேலவன் நீ இளமையிலே
வெற்றி பல குவித்தவனே !
வேல் விழியால் வீழ்ந்தவனே !
விழித்தெழுந்தாய் மாலடியில்
நூலவனே ! நுண்பொருளை
நூதனமாய் காட்டியவா !
நீலனே நீ ! நின் கழல்கள்
நித்தமுமே போற்றிடுவோம் !



# ஆண்டாள்

அஞ்சு குடிக்கொரு சந்ததியே!
பிஞ்சில் பழுத்த பெருநிதியே!
பட்டர் தொடுத்த மலர்த்தொடையே!
பரமன் ரசித்த சுவைக்கனியே!
பாவையளித்த நற்பைங்கொடியே!
பாமரர் உய்ந்திடச் செய்தவளே!
'மார்கழி' 'தை' எனும் மாதங்களை
மாண்புறச் செய்தவள் நீயலவோ!
மாதவன் தன்னையும் மாலையதால்
மயக்கியே மகிழ்வுறச் செய்தனையே
பெற்றவர் கோபன் யசோதைக்கு நீ
பேறு அளித்து மகிழ்ந்தனையே!
உற்றவர் மாலடியார்கள் என்றே
கற்றிடச் செய்த நற் கற்பகமே!
சங்குகள் தங்கிடும் மங்கல ஊர்
நங்கை நீ! நம்பியின் கைப்பிடித்தாய்
கொங்கைகள் தங்கிய கொற்றவனை
எங்களுக்காக்கிய நங்கையர் நீர்!
கண்ணனைப் பாடிய கன்னித்தமிழ்
கற்றிடும் தோறும் இனித்திடுதே!
எண்ணமெலாம் கமழ் இன்னமுதே!
எங்களின் நற்கதி நின்னமுதே.!

# 15

# ஆண்டாள்

பூரத்துதித்தவள் பூமகள் பொன்மகள்
ஆரமளித்தவள் வாரம் நமக்கே
பட்டரின் குட்டனை பாடித்திரிந்தவள்
மட்டவிழ் கூந்தலாள் மாலை உகப்பே!
தண்தமிழ் பாடல்கள் தந்தனள் முற்றுமே
கண்ணனின் கழலிணை பற்றுமே! பற்றுமே!
புதுவையாள் பொற்பெலாம் புண்டரீகன் தனை
வதுவையே செய்திட வாய்த்ததும் புதுமையே!
கமலமே கண்கரம் கமலமே திருவடி
அமலனே அவன் இவண் அவளுகந்ததனால்
வெற்பதில் நின்றவன் விருப்பிலே திகழ்ந்தவன்
பொற்பதமே கதி புண்ணியம் நமக்கே!
பாதகம் தீர்த்திடும் பரமனைக் காட்டியே
பாவமே போக்கினாள் பாவையாள் பாவையில்
மாலவன் மாலதில் மாதவள் தோய்ந்தனள்
மாலவன் தானுமே மாதவள் தேர்ந்தனன்
அரவணை கிடந்தவன் அரவணைத்திடவே
ஆய்ச்சியா யாகினாள் அந்தணர் மகளே!

16

# நாதமுனிகள்

ஆராத அருளமுதம் அளிக்கவந்தவன்
ஆசார்ய திலகமென அவதரித்தவன்
ஆழ்வார்கள் அருளிச் செயல் ஆழ்ந்து நின்றவன்
அகமகிழப் பண்ணுடனே அதையிசைத்தவன்

(வேறு)

மன்னனாரின் மடிகிடந்த மாதவன் இவன்
மாதம் ஆனி அனுஷ நாளில் மண்ணில் வந்தவன்
இன்னமுதாம் இசைத்தமிழின் இதயமானவன்
இலங்கு வைணவ மரபின் இணைப்புச் சங்கிலி
ஆயிரத்துள் பத்தெனவே அடியார் ஓதிட
ஆசார்ய நாதமுனி அதனை ஓர்ந்திட
ஆழ்வாரின் திருப்புளியாம் குடியடைந்தனன்.
அடியமர்ந்து கண்ணிநுண் சிறு தாம்பிசைத்தனன்.
காரிமாறன் கருணையுடன் 'கண்' அளித்தனன்
கற்க நின்ற பிரபந்தமெலாம் கருத்தில் நின்றன.
பொய்கை, பூதம், பேய், குருகோன், விட்ணுசித்தனே
பொலியும் ஆழ்வாரனை வரையும் புரிந்து கொண்டனன்.
அருளிச் செயல் மேகமென ஆர்ப்பரித்தனன்.
அதன் விளைவாய் அருட்பயிரை தழைக்கவைத்தனன்.
அருளுடனே தாளகதியையமைத்துத் தந்தவன்
அற்புதமாம் பரம்பரைக்கு ஆணிவேரவன்.
ஆளவந்தார் இவர் பெயரர் ஆசார்ய வள்ளல்
அற்புதமாம் பரம்பரைக்கு ஆதவன் இவரே.
மீள மீள வணங்கிடுவோம் மேலோன் நாதனை
மீளவும் நாம் பிறப்பதில்லை வைகுந்தம் நமக்கே

# காஞ்சி பூர்ணர்

இராமாநுசனின் மேன்மை விளங்கிடக்
காரணமானவராய்
பூமானிடராய் பூந்தமல்லியில் பூத்தநல் மல்லியிவர்
காமாதிகளை களைந்தெறிந்தார், நற்கச்சியில் -
கைங்கர்யம்
கோமான் தேவப்பெருமாளுக்கே கொண்டு நின்றார்
அடிமை.
நற்றாய், தந்தை, நலம் செய்தாரம் சுற்றம் -
அவனென்றார்
நான்காம் குலங்களில் மூன்றாம் குலத்தின் நன்மை
வெறுத்திட்டார்
பெற்றார் பெருமான் தனக்கே செய்யும் - பேரின்பத்
தொண்டு
உற்றார்போல உடனிருந்தாரே, உரையிடலும் உண்டு.
இதமாம் தொண்டு இதனைக் கொண்டு எதிராசன்
மகிழ்ந்தார்
இவர் யார்? என்றே நினைத்திடவில்லை இறைமை
உறவெண்ணி
நிகழும் தீர்த்தம் கொணர்ந்திடும் யதியார் நிமலரைக்
கண்டிட்டார்
இதமாய் வீசும் 'விசிறியார்' தனக்கே
இழந்துவிட்டார் தன்னை.
பூரணன் அருளின் பூரணர் தம்மைப்
போற்றியுகந்திட்டார்
போனகசேடம் புசித்திட எண்ணி புரிந்தார்
பெருந்தவமே
காரணனிடமே பூரணர் பெற்றார் கருணை
வார்த்தைகளை

ஆரணசாரம் அற்புதகீதை அறவழிப் பாதையதே.
பூரணன் யானே, பேதமே உண்மை, பாதமே
பணிதல் வழி
நாரணன் நினைவு நமனிடம் சேரும் வேளையில்
தேவையி(ல்)லை
தேகமழிந்திடும் போதினில் வைணவன் தேர்ந்தநிலை
பெறுவார்
திகழ்ந்திடும் பொறிகளை அளித்திட உரியவர்
நம்பிகள் பெரியவரே.
வார்த்தைகள் தந்தவர் பெற்றவர் கற்றவர் வணங்கிட
உரியவர்கள்
பார்த்தனை விடவும் பாரில் சிறந்தவர்
பாரதச் - செல்வரிவர்
வார்த்தைகள் இல்லையே, வைணவரிவரை
வர்ணிப்பதற்கிங்கே
வைணவ வித்து இவரைப்போல காண்பது வேறெங்கே!

19

# இராமானுசர்

கற்கும்போதே கசடறக் கற்ற கல்விச்செல்வர் இவர்
காஞ்சிப் பெருமாள் மஞ்சனமாடத் தீர்த்தம் தந்தவராம்
கோயில் திருமலை பெருமாள் கோயில் குடிகொள்
நெஞ்சினராம்
கொண்ட மறைப்பொருள் குவலயம் அறியக்கூறி
மகிழ்ந்தவராம்
'தண்டனையுண்டே' என்றதைத்தந்த தலைவர்
வினவிடவும்
'தமியேன் நரகம் உறுவேனெனினும் தாரணி
உய்ந்திடுமே'
பதிலையுணர்ந்து உணர்ந்து பார்த்தால் பரிவின்
ஒளி தெரியும்
பாரதம் கண்ட பத்தரைமாத்துத் தங்கம் இவர் புரியும்
வைணவப் பயிரை வாழ்வித்திடவே வந்த நல் விவசாயி
வயலில் வந்த வம்புக்களையை களைந்த யதிராசன்
முகத்தில் பொலிவு மொழியில் தெளிவு
முக்குறும்பறுத்தவராம்
சகத்தில் சரணாகதியின் நெறியை சாரமாய் ஆக்கியவர்
நாடிச்சென்றார் நற்பொருள்காண நானிலமெங்கணுமே
நல்லவை தேர்ந்து நாட்டிய நற்பொருள்
நலங்கொள் தாரணமே
தேடித்திரிந்தே திருநாரணனைத் திரும்பச் செய்தவராம்
திக்கெட்டும் புகழ் ஸ்ரீபாடியத்தின் திறவுக் கோலிவராம்
இராமன் முன்னே லவகுசர் இராமகானம் செய்ததுபோல்
இராமானுசனின் இணையடிகளிலே அமுதன் அந்தாதி
சாமானியமா! சார்ங்கபாணியும் சாதித்தது என்ன?
ஆமாம்! அமுதன் நூற்றந்தாதியும் ஆழ்வார்
சொல் ஒக்கும்

கோயில் ஒழுகு முறைகளில் காணும் குற்றம் நீக்கியவர்
குன்றம் கொண்டான் தனக்கும் கோயிற்பொறியைச்
சாற்றியவர்
குலத்தில் இழிந்தோர் தமையும் உய்யும்
திருக்குலமாக்கியவர்
குருவின் குறைகளனைத்தும் தீர்த்த குன்றின் தீபமிவர்
பாவைச்சீயர் காட்டிய பாதை பாவம் போக்கிவிடும்
பரமன் அடியார் பணிவும் தொண்டும் பாரின் அடியுரமே
தேவை இராமானுசரைப்போல தெளிந்த வைணவர்கள்
சேவை, சேவை, சேவை ஒன்றே செய்து சிறந்திடவே.

# கூரத்து ஆழ்வான்

கூரத்தாழ்வான் எனும் போதினிலே - ஒரு
குழலின்பம் கேட்குது காதினிலே - எங்கள்
சோரத்தனங்களை ஓட்டியவன் - உயர்
வான தனந்தனைக் காட்டியவன். (கூர)
ஸ்ரீவத்ஸாங்கனெனப் பேர் பெறுவோன் - செழுஞ்
செல்வச் செழுப்பிலே யார் நிகரே!
ஸ்ரீயப்பதி எனும் செல்வத்தினைப் - பெற்ற
சீர்மிகு வைணவச் செல்வர் இவர். (கூர)
ஆண்டாளைப் பெற்ற அரியனிவர் - இரு
ஆண்மக்களைப் பெற்ற பெரியனிவர்
வேண்டாம் ஒரு தங்க வட்டிலுமே - என்ற
தூண்டாச்சுடர் தூயரத்தினமே. (கூர)
உயர்நலமுடையவர்க் குற்றவராம் - அந்த
உடையவர் தமக்கே உடையவராய்
உடைமைகள் யாவையும் உதறிவிட்டார் - அந்த
ஒளிர்கதிர் சுடரென ஒளிர்ந்தவராம். (கூர)
உடல் பொருள் ஆவியாம் மூன்றினையும் - அந்த
உடையவர் தாள்களில் அர்ப்பணித்தார்
உயர்தனி மெய்ப்பொருள் கண்டவராம் - இவர்
ஒருதனி ஆழ்வானாய் உயர்ந்து நின்றார். (கூர)
மொழியைக் கடக்கும் பெரும்புகழான் - வஞ்சக்
குழியைக் கடக்கும் நற்றிருவடியான்
பழியைக் கடக்கும் பாங்கறிவித்தவன்
வழியைப் பற்றியவர் பழியற்றவர். (கூர)
பிறவிக் கடலுக்கே ஓடமென இங்கு
பிறந்த பெரியவர் பாஷ்யகாரர்
பெரியவர் மகிழ்வுடன் பரமபதம் பெறும்
பேரின்பம் தந்தவர் கூரத்தாழ்வான். (கூர)

சென்றால் குடையிவர் சேர்ந்திடு ஆசனம்
நின்றால் மலரடி நெடுந்துணையாம்
என்றும் உடனுறை தண்டமெனப் புகழ்க்
கன்று, நம் வைணவக் குன்றிவரே. (கூர)

கண்தானம் செய்த முதல்வனிவன் - களை
கண்ணானவன், உயர் பண்ணானவன்
கண்ணான 'தர்சனம்' போதுமென்றான்-வன்
கண்ணானும் வாழ்ந்திட 'ஏது' வானான். (கூர)

அத்தத்தில் வந்தவன் ஆழ்வானடா, அவன்
சித்தத்தில் என்றுமே ஸ்ரீவைணவம்
தத்தித் திரிந்திட்ட நாள் முதலாய் - அவர்
தந்த நெறிமுறை ஸ்ரீவைணவம்.

குறிப்பு : வன்கண்ணான் - நாலூரான்
ஏது - காரணம்.

## 23

# தேசிகன்

தூப்புல் குலமணியாய் தோன்றியவர் வாழ்க!
தொன்மறையின் மணிச்சுடராய் துலங்குபவர் வாழ்க!
மூப்புதிரை போக்கும் முறை தாமுரைத்தார் வாழ்க!
மூன்று மறைப்பொருள் விளக்கம் முழங்கியவர் வாழ்க!
பரிமுகனின் பதமலரின் பாத தூளி வாழ்க!
பதமலரைப் பாமலரால் பரவியவன் வாழ்க!
கருடநதிக்கரை இறைவன் கருணைபெற்றான் வாழ்க!
காஞ்சியருள் வரதன் அருட்கடல் கிடந்தான் வாழ்க!
ஓங்குமலை வேங்கடவன் அருட்துணைவி தன்னை
ஒருநூறு பாக்களிலே உணர்த்தியவன் வாழ்க!
ஆயகலை அறுபத்து நான்குணர்ந்தான் வாழ்க!
அற்புதப் பிரபந்தமதின் அழகுரைத்தான் வாழ்க!
தூயதமிழ் மறைவல்ல தூப்புல் மணி வாழ்க!
தொண்டுடனே பண்டைமுறை துலக்கியவர் வாழ்க!
ஒலித்திடும் வைணவ மணியின் நாத ஒலி வாழ்க!
ஓங்குமலை வேங்கடவன் பெயர் பெற்றாய் வாழ்க!

# நம் தேசிகன்

1) கணகண வெனுமணி யவதாரம்
கலிமடிந் திடவரு மவதாரம்
மணமிகு கவிமலர் தருவள்ளல்.
மயர்வறு மதிநலம் அருள்மன்னன்.

2) மூன்றெனு மறைப்பொருள் தெளிவாக்கி
முதுமறை தருநெறி எளிதாக்கி
தோன்றிடு அடியவர் புகழ்பாடி
துயராறு வழிமுறை தெளிவித்தார்.

3) தூப்புல் குலமணி புகழ்பாட
தூயநல் சேடனும் தடுமாற
பாப்புனை திறமதில் படுசுட்டி!
பாலாற்றங்கரையமர் ஞானி!

4) பலதுறை யறிந்தநல் பாவாணர்.
பரமனும் உகந்திடும் நாவாணர்.
கலைநயம் மிகுபல கவிநூல்கள்
கற்றவர் மனம் களிகொளும் நூல்கள்

5) திருவடி பெருமையை ஒரு நாளில்
திறனுடன் அமைத்த நல் திறம் தன்னை
இருநிலம் புகழ்ந்திடும் இவர்போல
கருவிலே திருவுடை கவியுண்டோ?

# மணவாள மாமுனிகள்

மூலமாகி ஞாலம் உண்ட மலின் பாதம் கண்டவர்
மூலம் தன்னில் வந்துதித்தார் மூவுலகும் வாழ்வுற
தாஸரண்ணர் தனயராகி தாரணியே உய்ந்திட
தாமுகந்த உணர்வுதன்னை தமருகந்ததாக்கினார்
அமுதமன்ன அமுதன் தன்னை அமுதமன்ன சொற்களால்
அமுதனாகி அரங்கந்தன்னில் அமுது செய்துவித்தவன்
அழகுச் சொற்கள் பழகும் ஆழ்வார்
அமுதச் சொற்கள் தம்மிலே
அமிழ்ந்த சைலநாதர் யார்?
அவர் திருவாய்மொழிப்பிள்ளை
அத்தன் அன்னை ஆன்ற ஆசான் அனைவருமே
இவரென
அன்புகொண்டு அனவரதம் அடிபணிந்து உய்ந்தவன்
சித்தன், சத்தன், சுத்தன், அத்தன் பத்தனாகி நின்றவன்
இத்தரையின் சொத்து இராமானுஜனின் பித்தன்மாமுனி
உள்ளம் கொள்ளை கொள்ளும் பிள்ளை
லோகார்யருக்குற்றவர்
சொன்ன வண்ணம் செய்தான் கோயில் சேர்ந்து
வாழ்ந்து நின்றவன்
கள்ளமற்ற அட்டதிக்கயங்கள் காட்டி நின்றவன்
கலியின் கொடுமை மறையவந்த கல்கியான மாமுனி
மாலையோடந்தாதி ஆர்த்தி பிரபந்தம் என்னும்
நூல்களே
மகிழும் தமிழில் மணம் பரப்பும் மாசிலாத மலர்களே
பூதூர் வாழும் வள்ளல் பாட்டு தேவராச மங்களம்
புலமை சிறக்க வடமொழியில் பூத்து நின்ற அற்புதம்
(வேறு)
மணவாளன் மனம்கொண்ட மணவாளன் இவனோ!
மணியான மொழி கொண்ட உரையாளன் இவனோ!
அணியான அரங்கநகர் அணியாளன் இவனோ!
அடிபோற்றி! அடிபோற்றி! அமரத்வம் அடைவோம்.

# நம்பாடுவான்

நம்பாடுவான் தனை நாம் பாடுவோம்
நலமான கைசிகம் நயந்தான் அவன்
வழிபாடு எண்ணியே சென்றான் அவன்
வழியில் ஓர் இராக்கதன் கண்டானவன்
'கொல்வேன் நான் உனை இன்று' இது இராக்கதன்
'கொடுத்தேன் நான் எனை நாளை'. இது பாடுவான்
'செல்வாய் நீ இன்று எங்கு? இது இராக்கதன்
'செல்வேன் நாரணன் கோயில்' இது பாடுவான்
'செய்வதுதான் என் அங்கு' இது இராக்கதன்
'செவிக்கிசை நான் தருகுவன்' இது பாடுவான்
'சென்றே நீ வந்திடு' இது இராக்கதன்
சென்றங்கே வந்தனன் நம் பாடுவான்.
கோடாத உரைகொண்டு வந்தான் அவன்
குளிர்ந்திட்ட மனம் கொண்டு இவை கூறுவான்
உன் பாடற்புண்ணியம் எனக்காக்கிடு,
உயர்வாழ்வை அடைந்தே நான்உனைப் போற்றுவேன்
நம்பாடுவான் தன்னால் நலம் பெற்றனன்
நாமும் நம்பாடுவான் புகழ் பாடுவோம்.

27

# ‘ புரு ’

தேவயானி தந்தை தந்த சாபம் பெற்றதால்
தீரனாம் யயாதி பாவம்! மூப்படைந்தனன்
தேகம் மீண்டும் திண்மையாக வேண்டி நின்றனன்
திகைத்து நின்ற புதல்வர் நால்வர் தர மறுத்தனர்
திரையும் நரையும் விரும்பும் மூடர் தரையில் உள்ளரோ
இரும்பு போன்ற எமது தோள்கள் இளைத்துபோவதா?
கரும்பு போன்ற இளமை வாழ்வு கசந்து போவதா?
அரும்பிலேயே முதுமை தீண்ட அனுமதிப்பதா?
முன் பிறந்த நான்கு மைந்தர் தர மறுத்ததை
பின் பிறந்த புதல்வன் ‘புரு’ தந்து நின்றனன்
எந்தன் இளமை ஏற்கவேண்டும் இனிய தந்தையே
உந்தன் முதுமை தந்தருள்க வந்தனம் பல
பெற்ற தந்தை பெற்ற வின்பம் பேசலாகுமோ!
பேதை மைந்தன் உற்ற துன்பம் உளம் உருக்குமே
பெற்றவர்க்கு உதவும் பிள்ளை பெரிய பிள்ளையே
பெறுபவற்றுள் இதனின் வேறு பேறு இல்லையே
வாள்களாகும் நாள்கள் அஞ்சும் வையந்தன்னிலே
வானவர் உகக்கும் மைந்த! வாழ்க! வாழ்கவே!
கோள்கள் மாறி குன்றம் மாறி கோளம் மாறினும்
நீளும் உன் புகழ் நிலைக்கும் வாழ்க பூருவே!

28

# புண்டரீகன்

விட்டல விட்டல பாண்டுரங்க,
விட்டல விட்டல பண்டரிநாத
எட்டிய தூரம் கேட்டிடும் நாதம்
இதுவே பக்தர்கள் ஓதிடும் வேதம்.
புண்டரீகனின் பண்டைய வாழ்க்கை
கண்டதே காட்சி கொண்டதே கோலம்
பெற்றவர் தம்மை மதிப்பதுமில்லை
பெரியவர் தம்மை துதிப்பதுமில்லை
(ஒரு நாள்)
குக்குட முனிவர் ஆச்ரமந்தன்னில்
கூனிக்குறுகி குன்றியவராய்
கங்கை யமுனை சரசுவதி மூவர்
சென்றதைக் கண்டான் நம்புண்டரீகன்
மீண்டும் அவர்கள் மின்னொளியுடனே
மேகலை, ஆடை, மேனியொளிரக்
கண்டனன் சென்றனன் கால்களில் வீழ்ந்தே
காரணன் கேட்டனன் காட்சிகள் மாற
பெற்றவர் தம்மைப் பேணுவதொன்றே
பெருநெறியாக்கிக் கொண்டவர் அந்த
குக்குட முனிவரின் அற்புத சக்தி
குப்பையை கோபுரமாக்கியதென்றார்!
கற்றனன் அன்றே பெற்றவர் பேணும்
நற்றவம் ஒன்றே நல்லறமென்றே!
கண்ணனும் வந்தான், கல்லின்மேல் நின்றான்
காத்துக் கிடந்தான், கருணை பொழிந்தான்
விட்டல, விட்டல பாண்டுரங்க
விட்டல, விட்டல பண்டரிநாத
எட்டிய தூரம் கேட்டிடும் நாதம்
இதுவே பக்தர்கள் நவின்றிடும் வேதம்.

# ஏகலைவ்யன்

இப்படியும் ஒரு சீடனா?
இவ்வுலகில் ஒரு அற்புதம்
முப்பொழுதும் அவன் நெஞ்சிலே
முனிவன் துரோணன் தங்கிட
எப்படியாகிலும் அவரது
திருவடி நீழலைப் பெற்றிட
எத்துணை ஊற்றமே கொண்டனன்.
எட்டி நில், கிட்டவராதேடா
என்றவர் சீறிய போதிலும்
சுட்டியாய் நின்ற நற்சீடனும்
கட்டினன் துரோணருக்கோர் சிலை
நித்திய பூசைகள் செய்தனன்.
நெஞ்சறி கல்வி பயின்றனன்.
அர்ச்சுனன் மட்டுமே கற்ற ஓர்
அற்புத வித்தையும் தேர்ந்தனன்.
ஆர்வமும் அன்புமே கொண்டவன்
அர்ச்சுனன் தன்னையும் விஞ்சினன்.
துரோணனும் சூழ்ச்சியாய் வேண்டினன்
தக்கணை 'தன் விரல்' தந்தனன்
எப்படியாகிலும் துரோணனின்
சீடனாய் ஆகிட எண்ணினான்.
கல்வியை தக்கணையாக்கிய
கசடறு சீடனே! வாழ்க நீ!
பெற்றதை இழந்து நீ பெற்றனை
பெரும்புகழ் அஃதும் ஓர் வெற்றியே.

# துருவன்

வாழ்க்கைக் கடலில் தவிக்கின்ற
வறியோர் தமக்கு ஓர் விளக்கு
வற்றாவின்ப நெறி காட்டும்
உத்தானபாதன் குலவிளக்கு
பெற்றவன் மடியில் அமர்ந்திடவும்
பிள்ளைக்குரிமை இல்லையென்றார்
பெற்றம் மேய்த்த பெரியவனின்
பொற்றாமரைகள் தஞ்சமென
கானகந்தன்னில் கடுந்தவமே
கன்னிச்சிறுவன் இயற்றினனே.
நாரதர் போன்ற நல்லோர்கள்
நலம் மிகு துருவனை வாழ்த்திடவே
நானிலம் போற்றும் நாரணனை
நன்னெஞ்சதிலே நிலை நிறுத்தி
ஆணிவன் போலே அவனிதனில்
அருந்தவம் செய்தோர் யாருமிலர்!
அற்புதன் பொற்பதம் கண்டுவந்தான்
ஆகாயத்தில் நிலைத்துவிட்டான்.
அற்பர்களிடையே அருநிதியம்
அழியாச் செல்வம் இளந்துருவன்.

# துளஸிதாஸர்

தந்தை ஆத்மராமனின்
தவப்புதல்வர் துளஸியார்
முந்தையார் முயன்றதால்
முளைத்தெழு ஒளிக்கதிர்

சொந்தவாழ்வின் காமமே
சுகம் என நினைத்தவர்
நொந்து நோன்புசெய்து நற்
சிந்தனைகள் பெற்றவர்

"மமதா" மனைவி தூண்டுதல்
மாணிக்கம் விழித்தது
"ராமசரிதமானஸ்" ஆம்!
இரத்தினம் பிறந்தது.

ஆஞ்சநேயன் தன்னையே
ஆசார்யனாய்க் கொண்டனன்
அக்பர் சக்ரவர்த்தியார்
அடிமைப்பட்டார் இவரிடம்

நாடுபோற்றும் நற்கவி
ஞானமேதை இப்புவி
வாழ்த்த வாழ்ந்த அற்புதன்
வணங்குவோம் இவர்பதம்

## 32

# " ததிபாண்டன் "

தவமேதும் செய்யாமல் தனமெதுவும் இல்லாமல்
பவக்கடலைக் கடந்திடவே பானையதே உதவியதே
உவமையிலாப் பரம்பொருளும் உரிமையுடன்
உன்னிடத்தே
ஒளிந்துகொளும் இடம்தேட உதவியவன் நீயலவோ?

பழமைக்கும் பழமையவன் பழம்பானைக்குள்
மறைந்தான்
பரம்பொருளின் எளிமைக்குப் பகன்றிடுமோ இதுசாட்சி!
மண்ணையெலாம் உண்டவனை மண்பானை
விழுங்குவதா?
பொன்வண்ணத் திருமேனி புழுதிக்குள் அடைக்கலமா!

ஓரடியால் உலகளந்தான் ஒடுங்குவதா மூடிக்குள்
உன்பெயரும் அறியோம் யாம் ஊருக்கு நீ
"ததிபாண்டன்"
வெறும்பானைத் தனைக்கொண்டே விண்ணாட்டில்
இடம் கொண்டோய்
குறும்பானை வென்றவன் நீ குவலயத்தார்
போற்றிடவே.

தயிரிருந்த பானையிலே தாமரையான் தானிருந்தான்
தயிரிருந்த பானைக்கும் தவநாட்டைக் கேட்டனையே!
என்னேநின் இதயநிலம்! எம்பெருமான் உதயநிலம்!
இடம் தேடி வந்துநின்றே ஈடில் புகழளித்தாரே.

எதுவும் இயலார்க்கே எம்பெருமான் இசைவாரோ
கதியற்ற ததிபாண்டன் கதிபெற்ற கதையிதனால்
நிதிபெற்றோம் நாமெல்லாம் நின்மலனை சரண்புகவே
விதிபெற்றோம். இனி நமக்கு வேறென்ன
வேண்டுவதே!

# பீஷ்மன்

—※—

தந்தை காதல் வாழ்வுற
தனித்து நின்ற தியாகியே
சிந்தை தன்னில் கூட நீ
சிறியவின்பம் நீங்கினாய்.
உந்தன் தியாகம் கண்டவர்
'உயர்க பீஷ்மன்' என்றனர்.
உந்தை சந்துனு உனை
உச்சி மீது கொண்டனன்.
நினைத்தபோது மரணமே
நினக்கு எய்தும் என்றனன்.
உனைத்தினம் நினைத்திடின்
உயர்ந்து சிந்தையொளிருமே.
உதிட்டிரன் தனக்கு நீ
அளித்த 'ஆயிரம் பெயர்'
துதிப்பவர் தமக்கு ஓர்
நிதித்திரட்டு அல்லவோ!
மெய்யனான கண்ணனும்
பொய்யனாகி நின்றனன்.
ஐய, நின் பெருமையை
அறிந்து கூறல் அரியதே.
(ஆயிரம் பெயர்-ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாமம்)



# விதுரன்

—※—

பாரதமிதில் மாரதன் இவன் யாரிவன் நிகராகுவர்?
பாரதமருள் கூர்மதியினன் பாலகன் இவனாயினன்
சாறிவன் மறைவாழ்வுற வருசத்தியன் அரிபத்தனே!
கூறினன் அருநன்னெறிதனை சீறினன் முறைமாறிடில்

தாழ்ந்தவன் என தாரணிதனில் தாழ்த்திய
நிலைபெற்றனன்.
வாழ்ந்தனன் வரிவில்லினன் வசுதேவன் தங்கிடு
இல்லினன்
ஆழ்ந்தவன் அறவேலியன் அருள் சூழ்ந்தவன்
அருநாவினன்
ஆனந்தம் அரிநாமமே தரும் சேமமே என வாழ்ந்தவன்

பாதகம்தரு சூதினை படுபாதகர் மனம்கொண்டனர்
எனும்
சேதியைச் செவியுற்றதும் சினமுற்றனன் அறம்
சொற்றனன்
ஓதிய உரையாவையும் அறநீதியாய் ஒளிர்கின்றன
வேதியன் இவன் போதியா உளங்கொண்டவன்
அருள் உண்டதால்,

மோதிடும் பகைப் போரதனிலே மூள்வது
வெறும் குரோதமே
ஓதிடும்மறை மீறிடும்வழி ஒதுங்கினன் உளம்வென்றவன்
சாதியின் பழிபூண்டவன் அறச்சாறென உலகாண்டவன்
நீதியின் கதியானவன் இந்த நின்மலன் பதம்
போற்றுவோம்.

★

# ஜாம்பவான்

நான் முகனே ஜாம்பவான்
நல்லுலகில் தோன்றினான்
தான் மிருகமாய் ஆயினும்
தண்ணளியில் தாயனான்
நான்முகங்கள் கண்டவன்
நுண்பொருள்கள் கொண்டவன்
வானளந்த சேவடி
வலமே வந்த திறலினன்
கானடைந்த காவலன்
கமலையைப் பிரிந்த பின்
தானடைந்தான் 'மூகமே'
தாளவொண்ணாச் சோகமே.
வாலியை வதைத்த பின்
வானரங்கள் தேடின.
காலின் மைந்தனோடவன்
கரமாய் நின்ற சாம்பனே
கற்பின் செல்வி சீதையை
காணவேண்டி தூண்டினன்
மாருதியின் மாண்பெலாம்
மனம் திறந்து பேசினான்
மாரதனாம் இராவணன்
மடிய மூல காரணன்
மருந்துமலை கொணர்க நீ
மன்னனை நாம் மீட்கலாம்
கருத்துரைகள் தந்ததால்
கற்பகமாய் ஆயினன்
கரடியான போதிலும்.
கைங்கர்ய ஸ்ரீ ஜாம்பவான்
கரம் குவித்துப் போற்றுவோம்
கருத்தில் கொள்வோம் இவர் புகழ் !
(மூகம்—ருசிய மூகம்)

# அர்ச்சுனன்

என்ன பேறு பெற்றனை?
    எம்பிரானுக் குற்றனை?
இடர் படர்ந்த போதெலாம்
    இறைவன் தானுமுதவினான்

இறுதியாகத் தேரிலே
    இறைவன் பாகனாகினான்
இனிய கீதை யமுதினை
    எடுத்தியம்ப உதவினான்

உபநிடதப் பசுவினை
    ஊட்டி நின்றவன் இவன்
உருப்படியாய் கீதைப்பால்
    உலகுக்களித்தான் கண்ணனே

மாடுபிடிச் சண்டையில்
    மாரதனாய் நின்றவன்
பாரதமாம் சண்டையில்
    பாவம் ஏழையாகினான்

கண்ணன் நண்பனாகினான்
    கண்ணன் நடந்தேகினான்
கண்ணன் போதனை தரக்
    கற்றுக் கொண்ட மாணவன்

அவனுக்காகப் பெற்றது
    அவனி தனக்கே உற்றது
எவனானால்தான் என்னடா,
    இவனைப்போல யாரடா,

## 37

"வில்லவருள் விசயன் நான்"
விளம்பியவன் கண்ணனே.
பண்டவருள் பார்த்தனே
பரமனுக்கு கந்தவன்
பாரதத்துச் செல்வருள்
பதினாறுமே பெற்றவன்
பார்த்தனே உனைப் பரவுவேன்
பாரில் நல்ல செல்வன் நீ!



38

# சகதேவன்

பாண்டவரில் இளையவன்
பக்தர்களில் முதிர்ந்தவன்
பாஞ்ச சன்யன் தன்னையும்
பக்தியால் பிணித்தவன்
வேடம் கொண்ட போதிலும்
மாடு மேய்த்து நின்றவன்
வேணுநாதன் தன்னையே
விரும்பியே துதித்தவன்
படையெடுக்க வேண்டிய
நாளும் கோளும் ஆய்ந்திட
பாருகக்கும் பார்த்திபன்
நேரில் வந்த போதிலே
தடையொன்றின்றி தக்கநாள்
தந்துநின்ற தந்திரி
தமக்கு தீங்கதாயினும்
தருமமேய நெறியினான்
தனக்கு நேரிலாதவன்
தருமனுக்கு ஏற்றவன்
தரணியே புகழ்ந்திடும்
தத்துவப் புதல்வனாம்.
மனத்தில் சொல்லில் செயலதில்
மாசிலாத தேவனே.
மனம் கனிந்து வாழ்த்துவம்
மங்கல சகதேவனே.

## 39

# வியாசர்

வியாசர் எனும் முனி தோன்றினார்.
வேதம் மகிழ்ந்தது மலர்ந்தது
பேசும் வார்த்தைகள் (இ)ரத்தினம்
தேசும் திறலும் மொய்த்தன.
பாரதக் கதை மூலமே
பரவச் செய்தது தத்துவம்
பகவத் கீதை அற்புதம்
பாரோர் தமக்கது கற்பகம்
விட்ணுதாம் இங்கு வியாசரே
வியாசர்தான் இங்கு விட்ணுவே
விரித்துரைத்த புராணங்கள்
விளக்கும் உண்மைகளே அறம்
சுகன் எனும் மகன் மூலமே
சுகமாய் சரிதமே செய்தவர்
இகபர சுகம் தந்திடும்
இனிய பாகவ தக்கதை
முன்னுமில்லை இவர் நிகர்
பின்னுமில்லை இவர் நிகர்
முற்றுணர்ந்த ஓர் மாமுனி
கற்றுணர்ந்து களித்திடு.

# உபமன்யு

தௌம்யர் - ஒளியுள்ளவனே, உபமன்யு.
உன் உடல் பெருத்திடும் வகையென்ன?

உபமன்யு - ஓட்டிச் செல்லும் மாடுகளை
ஓய்வாய் மேய விட்டு விட்டு
ஓட்டில் பிச்சை எடுத்திடுவேன்
உணவாய் அதையே புசித்திடுவேன்.

தௌம்யர் - ஓட்டில் கிடைக்கும் பிட்சையினை
உடனே என்னிடம் கொணர்ந்திடுக.

உபமன்யு - உத்தரவின்படி குருதேவா!
உடனே கொணர்ந்து தந்திடுவேன்.
(நாட்கள் சிலவே சென்றதையா)

தௌம்யர் - ஒளியுள்ளவனே உபமன்யு
உன் உடல் பெருத்திடும் வகையென்ன?

உபமன்யு - ஆவின் பாலையருந்துகிறேன்
அதனால் அயராதிருக்கின்றேன்.

தௌம்யர் - கன்றுகள் உரிமை அதுவன்றோ!
கறந்தே பாலைக் குடிக்காதே.

உபமன்யு - உத்தரவின்படி குருதேவா!
உங்கள் சொற்கள் போற்றிடுவோம்
(நாட்கள் சிலவே சென்றதம்மா)

தௌம்யர் - ஒளியுள்ளவனே, உபமன்யு
உன் உடல் பெருத்திடும் வகையென்ன?

உபமன்யு - உத்தமரே என் குருதேவா
ஒழுகும் நுரையைக் குடிக்கின்றேன்.

தௌம்யர் - கன்றுகள் நுரையை அருந்துவதும்
கள்ளவழிதான் அருந்தாதே.

உபமன்யு - உத்தரவின்படி குருதேவா
உங்கள் சொற்களைப் போற்றிடுவேன்.
[பாவம், சிறுவன் பசித்தொல்லை
பாங்காய் உண்டிட உணவில்லை
பச்சை இலைக்கும் அலைந்திட்டான்
பார்த்த எருக்கை உண்டிட்டான்
பாவம் பார்வை இழந்திட்டான்
பாழும் கிணற்றில் விழுந்திட்டான்
சீடன் ஏனோ வரவில்லை
சீடனைத் தேடி குரு சென்றார்.

தௌம்யர் - மன்யு, மன்யு, எங்குள்ளாய்?

உபமன்யு - அடியேன், அடியேன், கிணற்றடியில்
அரும்பசியாலே எருக்குண்டேன்
அதனால் பார்வை சுருக்குண்டேன்
ஐயா, கிணற்றில் வீழ்ந்திட்டேன்

தௌம்யர் - மன்யு, அசுவினிகளைத் துதிப்பாய்
முன போல் கண்ணொளி பெற்றிடுவாய்
துதித்தான் உதித்தார் தேவதைகள்
தூய நல்லமுதைத் தந்திட்டார்
இப்படியும் ஒரு நற்சீடன்
இதிகாசத்தில் தான் உண்டோ?

# நயினாசாரியர்

தூப்புல் குலமணி ஒலியானாய்
துளங்கிடு நெறியதன் பயனானாய்
வரதா சார்யன் எனும் பெயரோய்
வள்ளல் புகழ்தனை வளர்த்திட்டாய்
பிள்ளையந்தாதி அளித்திட்டாய்
பின்னுளார் உரைத்து உயர்ந்திடவே
கடாம்பி அப்புளார் வரிசையதில்
காவலன் தூப்புல் தம் சேயானாய்.
பெற்றனம் பெரும்பயன் அதையோதி
பெரியவனே ! நீர் பேறளித்தீர்;
உற்றவரே நீர் உமக்கடியோம்
உறுநெறி காட்டினீர் நன்றிபல
கற்றன அனைத்தும் தேசிகனால்
கருத்தை உரைத்தனை கவிகளிலே
பெற்றனம் நும்மை, பேறு பெற்றோம்
பிரியாமல் உமை இணைந்திருப்போம்.

# குசேலன்

எப்படியும் வாழலாம் என்ற இந்த உலகிலே
இப்படித்தான் வாழணும் என்று வாழ்ந்து காட்டினார்
ஏழ்மைக்கடல் நீந்திட எம்பிரானை நாடுங்கள்
என்றே தாரம் சொல்லவும் ஏகிநின்றான் துவாரகை
ஓங்கும் மாட மாளிகை ஒளிரும் கூட கோபுரம்
ஒடுங்கிநின்ற அந்தணன் ஊமையாகி நின்றனன்
தாயைக்கண்ட சேயென தாமரைக்கண் நீரிட
போயழைத்து வாருங்கள் புனிதன் தன்னை சடுதியில்
மாயன் கூறி நின்றனன் மகிழ்ந்து நின்றான் மறையவன்
மாணவப்பருவமே மனங்களில் நிறைந்திட
எத்தனை சிறப்புகள்! ஏழையன்று எய்தினன்
இதயம் உருகிநைந்திட ஏழை ஏழையாகினான்
எடுத்துவந்த அவலையும் எடுத்துக் கொண்டான்
எம்பிரான்
எழுபிறப்பு வறுமையும் எங்கு ஓடி மறைந்ததோ?
கேட்கவில்லை பெற்றனன் கேண்மையான் குசேலனே
கேட்டுப் பெற்றான் கண்ணனே கிழிந்த கந்தல்
அவலையே
செவ்வ நாரணன் மனம் சென்றதெங்கு சிந்தியும்
சேர்ந்தநற் குசேலனார் சரணகமலம் வந்தனம்.

# மார்க்கண்டேயர்

—⁂—

எங்கும் இலாததோர் காட்சி
இலங்கும் மார்க்கண்டேயர் மாட்சி
என்னப்பன் எல்லோர்க்கும் மூத்தோன்
இனிய திருவிண்ணகர் பூத்தான்
மாவலி முன் மூன்றடிகள் கேட்டான்
மன்னனிடம் ஐந்து இ(ல்)லம் கேட்டான்.
மாசிலாத் திருமகளை வேண்டி
மார்க்கண்டேயர் தம்மை நாடி
மகளை 'நீர் தந்திடுக' என்றான்.
மண்ணில் மாலோலனாய் நின்றான்
உப்பிலா துண்டிடுவேன் என்றான்
ஒப்பிலானாகியே நின்றான்
எப்பொழுதும் மாமனார் இங்கே
எழிலாக வீற்றிருக்கின்றார்
எதிரிலே எழில் மங்கை நல்லாள்
எம்பெருமான் எழிலாக நிற்பான்
வாருங்கள்! வணங்குங்கள் பாதம்
வசையில்லை இசையோங்கும் நாளும்!

# புண்டரிக முனிவர்

தொண்டை நாட்டுத் துறைமுகமாய்
தொல் பொருட் சிறப்புப் பெட்டகமாய்
புண்டரிகன் தம் பிறப்பிடமாய்
பொலிந்து நின்ற கடன்மல்லை
முனிவன் மனத்தில் பேராசை
மூரிநீர் வண்ணன் திருவடியில்
புனித மலராம் அரவிந்தம்
பொருத்திப் போற்றிடும் விருப்புடனே
காண்போர் எல்லாம் நகைத்திடவே
திருப்பாற் கடலின் நாயகனை
திருவின்மிக்கான் அடைந்திடவே
விருப்பால் வெற்றுக் கைகளினால்
வேஷமாய் இறைத்தே வியர்த்திட்டான்
ஆசைக் கடலில் மிதப்பவனை
அஞ்சன வண்ணன் மிக விரும்பி
ஓசைக்கடலின் கரையதனில்
ஒளிர் அந்தணனாய் வந்து நின்றான்
ஐயா, எனக்குப் பசிக்கிறது
அளிப்பாய் உணவு நின்பணியைச்
செய்வேன் நானே என்றிட்டான்
செகத்துக்கெல்லாம் ஒரு நாதன்.
சென்றான் முனிவன் உணவுக்காய்
சீக்கிரம் திரும்பி வந்து விட்டான்.
கண்டான் அங்கே கமலமலர்
கொண்டே கொண்டல் கிடந்த நிலை
சங்கு சக்கரம் இல்லாமல்
சக்கரபாணி கிடந்திட்டான்.
அங்கம் எல்லாம் உருகிடவே
அவனடி தன்னைப் பணிந்திட்டான்
தலமதில் சயனம் கொண்டுவிட்டான்
தவமுனி புண்டரிகனுக்காக
எத்திறம் இறைவன் எளிமைநில்ல
ஏற்றமெல்லாம் அடியாருக்கே!

# பிரஹ்லாதன்

1. மாலுக்குகந்தவன் மாசற்ற நெஞ்சினன்
மாறாத பேரெழிலினன்
பாலூட்டு முன்னரே மாலூட்டப் பெற்றவன்
பக்தியாம் பயிரானவன்
பொல்லாவரக்கனாம் எல்லோர்க்கும் தீயனாம்
இரணியன் மகனானவன்
எல்லாவுலகமும் ஏத்தும் புகழ்மிகு
இளைஞன் நற்பிரகலாதனே

2 பள்ளிப் பருவம் அதை பிள்ளையடைந்ததால்
சொல்லித்தரச் செய்தனன்
இல்லை இறைவனே எல்லாம் இரணியன்
என்றனன் பள்ளியாசான்
இல்லாத இடமிலை இறைவன் அவன் அலால்
இவ்வுலகும் இல்லையென்றான்
''செல்லாதடா'' அது செய்வேன் கொலை உனை
சீறினான் செங்கண்ணனே

3. கல்லையே கட்டியே கடலிலேயிட்டனன்
கருணையில் காவலனவன்
நஞ்சினையூட்டியும் நாகத்தையோட்டியும்
மைந்தனை மிக வாட்டினான்
எத்துயர் ஆயினும் பத்துடையடியவர்
சித்தமே சிதைவதுண்டோ
இத்தனை செய்துமே இம்மியும் மாறாத
இளைஞனை அரக்கன் கேட்டான்

4. எங்குளன் கண்ணனே, எங்குமுளன் என்றனன்
இரணியன் சீற்றம் மிகவே
இங்குளனோ என்றனன் எட்டி உதைத்தனன்
இருகூறாய் தூண்பிளக்க
மங்காத ஒளியுடன் மால் நரசிங்கமாய்
மனிதன் முன் தோன்றினாயே
கங்கையணிந்தவன் கமண்டலம் கொண்டவன்
களிப்புடன் தொழுதேத்தவே

5. சிறுவன் துதித்திட சீறியதானவன்
சிக்கிக்கொண்டான் பிடியிலே
மடிமேல் கிடத்தியே மாறாதவன்புடன்
மனதைத் திறந்து பார்த்தான்
மன்பதை தன்னிலே மாலவன் புகழல்லால்
தின்பதற் கென்னவுண்டு
மாலடியார் குழாம் மாண்புறச் செய்திட்ட
மகனிவன் வாழ்க, வாழ்க!



# கஜேந்திரன்

பழவினையறுத்திட உருவெடுத்தார்
    பரமனின் மலரடி தினம் பணிந்தார்
மதமிகு களிறென வடிவெடுத்தும்
    மறைதொழும் மலரடி மறந்ததில்லை
பிடியதன் பிடியதில் முயங்கிடினும்
    படிந்தது மனந்தனில் பரமனடி
மணமிகு மலரதைத் தினம் பறித்தே
    மாலவன் மலரடி துதித்துவந்தார்
முதலதைத் தினம் தொழும் வேழமிவர்
    முதலை ஓர் நாள் அவர்கால் கதுவ
முதன் முதல் முளைத்தெழு முழு முதலே
    மூலமே! ஞாலமே! மூத்தவனே - என
ஓலமெழுந்திட ஞாலமெலாம்
    ஓர் முதல் யாரென ஓர்ந்திடவே
காரண காரியம் யாவையுமாய்
    கற்பவன்; கற்றவன் கண்ணனவன்
பூரணன் நாரணன் பொலிந்திடவே
    பூமியை நோக்கி ஓடிவர
நேமியும் சங்கொடு சார்ங்கமதும்
    நெடுமால் விசையதைத் தொடர்ந்திடவே
வந்தனன் வாழ்ந்தனர் மாலடியார்
    நொந்தது முதலையும் நோவுபட்டே
இந்திரவேழம் கண்ணீர் சொரிய
    இமயவர் மலர்ப் பன்னீர் பொழிய
சந்திர சூரியர் உள்ளவரை
    சாட்சியாய் நிற்கும் கஜேந்திரனே!
வந்தனை செய்வதின் பொருளறிந்தோம்
    வாழ்ந்திடுவோம், தினம் வாழ்த்திடுவோம்

# பரதன்

தந்தையும் இறந்தனன் தாயும் பேயளாயினள்
முந்தையர் நெறியதே சிந்தை கொண்டு நின்றனன்
முன்னவன் தன் மணிமுடி பின்னவன் அணிவதை
எண்ணவும் மறுத்தனன் எம்பிரானைத் தேடினன்
பத்திகொண்டு அண்ணனின் பாதம் போற்றிவேண்டியும்
பாதுகைகள் தந்தனன் பாவம் பரதன் நொந்தனன்
நந்தியம் பதியிடை நாதன் பாதுகந்தனை
சிந்தை சொற்கள் செயலதால் வந்தனை புரிந்தனன்
ஏழிரண்டு ஆண்டுகள் எரியில் மெழுகாயினன்
ஏற்றகாலம் வந்ததும் எரியில் வீழ்வன் என்றனன்
ஆஞ்சநேயன் வந்தனன் அனலையும் அணைத்தனன்
அகிலமெல்லாம் பரதனை 'அடியன்' என்று போற்றிட
புதிய பாதை கண்ட நற்புனிதன் பரதன் வாழ்கவே!
பூமிதன்னில் யாங்கணும் இல்லை இப்புனிதன்போல்.

# இலக்குவன்

—✲—

தம்பியாய் தந்தையாய் தாயுமாய் தனயனாய்
தாசரதி தாசனானாய்!
எம்பிரான் தன்னையே என்றுமே ஏத்தியே
ஏவலனுமாகி நின்றாய்.
காட்டிலும் நாட்டிலும் கங்கைக் கரையிலும்
காவலன் ஆகி நின்றாய்.
கங்குல் பகல் துயிலாது காகுத்தற்கேவலே
கண்வேலி செய்து காத்தாய்.
இலைக்குடில் அமைப்பதில் இலையுனக்கிணையென
இலங்கிய இலக்குவன் நீ!
கலைக்குயில் பிரிந்திட கலங்கிய தலைவனின்
கண்ணீரை மாற்றி நின்றாய்.
சிலைக்கொருவன் இராமனின் சித்திரக் கரந்திகழ்
சீர்மிகு அத்திரம் நீ!
தலையறுத்தன்று நீ இந்திரசித்தனை
தரைவீழச் செய்ததுண்மை.
சென்றிடில் குடையென சேர்ந்திடில் ஆசனம்
செய்தொண்டு ஏராளமே.
வென்றவில் வீரனின் வலக்கரமானவா
வெற்றிக்கு வித்தானவா!
என்றுமே எம்பிரான் தன்னுடன் நின்றவ
இலக்குமிஸம்பன்னனனே!
நன்று உன் திருவடி நற்றுணையாகியே
நலமெலாம் அருளட்டுமே!

★

# சத்ருக்னன்

(சு)மித்திரையின் புத்திரனாய்
இத்தரை உதித்தவனே !
சத்துவ குணத்தினனே,
பத்தரின் முதற்குடியே !
கற்றவர் விரும்பிடுநற்
காகுத்தற் கிளையவனே !
நற்றவப்பயிர் வளர்த்த
நம்பிதனக் குற்றவனே !
அற்றவர்க்கு அருமருந்தின்
அடிகட்கே ஆட்பட்ட
அடியாரின் அடியானாய்
அடிவருடி ! அற்புதனே !
மதுரகவி பரம்பரைக்கே
மணம்தந்த மகராச !
மௌனமொழி பரப்பியான் !
மௌளிதனை மறுத்தவனே !
உரைகல்லில் உரசாத,
ஒரு தம்பி நீயன்றோ ?
கரையில்லாத் தொண்டதிலே
கரைந்தவனே ! கைகுவித்தோம் !
தயரதனின் புதல்வரிலே
தரம் குறைந்தார் எவருமிலை.
தம்பியர்கள் மூவரிலே
தாழ்ந்தவர்கள் எவருமில்லை.
கருணைமழை காகுத்தன்
கையானான் இலக்குவனே !
பாதுகையே பரத நம்பி
பாததூளி சத்ருக்னன் !
பரந்தாமன் பாற்கடலே !
பணியாளன் தயிரவான்
பரதநம்பி நறுவெண்ணெய் !
பசுநெய்யே சத்ருக்னன் !
சிலைக்கொருவன் சீர்த்தருவாம்
இலக்குவனார் பூத்தமலர் !
இலங்குகனி பரத நம்பி
இனிய சுவை சத்ருக்னன்.

# சபரி

கூனிக்குறுகி வருகின்றாள்
குவலயத்திற்கே ஒரு அன்னை.
மானின் கூட்டம் அவள் உறவு
மதங்க முனிவரின் இதயப்பூ.
ஏனிப்படியே பதறுகிறாள்?
எம்பிரான் இராமனை எதிர்கொள்ள,
எப்படி அவனை வரவேற்பேன்?
ஏழை, எளியேன், கீழ்மகள் யான்.
ஆசனமில்லை, அருஞ்சுவையாம்
போசனமில்லை, பூவில்லை
ஊர்சனமில்லை, உறவில்லை
ஒருவன் அவனை எதிர்கொள்ள,
கண்ணில் காணும் கனிகள்தான்
கண்ணன் தனக்கு காணிக்கை,
கண்ணீர்க் கடலில் நீந்துகிறேன்
கருணை மேகம் கனிந்திடுமா!
என்றே ஏங்கிய சபரியின் முன்
எம்பிரான் வந்தான், இதயத்தால்
'நன்று, நன்று' என்றிட்டான்.
நாவால் சுவைத்தான் நற்கனிகள்
முதிர்ந்த பழம் அவள்; முறுவலித்தே
முழுவதுமாக உண்டிட்டான்!
உதிர்ந்த பழமெலாம் வெறும் பழமே!
உத்தமி சபரியோ ஞானப்பழம்.

# ஜனகர்

—*—

பெயரைச் சொன்னால் பெருகும் இன்பம்
பெரிய மனிதர் இவர்.
பெரிய பிராட்டியைப் பேணி வளர்த்த
பெருமைக்குரியரிவர்,
மிதிலைபற்றி யெரியும்பொழுதும் மேன்மைக்குரிய இவர்
அதிர்தல் இன்றி ஆசானிடத்தே கூறிய மறுமொழியே,
அகிலம் புகழும் பேற்றையளித்தது
அறிவோம் அனைவருமே.
என்னுடைமையென எதுவும் இல்லை
இழப்பும் இல்லையென்றார்.
எத்துணை பெரிய உண்மை அஃதே
எளிதாய் உரைத்திட்டார்.
நம்பியின் கையில் நங்கையைச் சேர்த்தே
நல்வினைப்பயன் துய்த்தார்.
நன்னகர் மிதிலையைத் தலைநகராக்கி
நல்லாட்சியைத் தந்தார்
பொன்மகள் இவளே பொருத்தமுடனே
புரிவாள் நல்லறமே!
என்மகள் என்றே கூறிப்பெருமை
கொண்டது தாயுள்ளம்
தத்துவம் சத்தியம் அத்தனையும்
உணர்தவ முனியரசரிவர்
நித்தியம் நெஞ்சிலே நிலைபெறும் சனகரே
நின் பதமலர் சரணம்.

# சடாயு

அருணனவன் புதல்வனிவன் அரியது புரிந்தோன்
கருணையுளம் கருதியதை கடிதினில் அடைவோன்
வரு கதிரோன் தனையடைய வான்வழி பறந்தோன்
விரிசிறகோன் சம்பாதியால் நலம் அடைந்தோன்
உரிமையுடன் துயரதனின் உடலென உயிர்த்தோன்
பிரிந்தானவன் என அறிந்து பெருங்கண்ணீருகுத்தோன்
வரிசிலையர் வாட்கண்ணி வந்தடைந்த போது
வரவேற்று வாழ்வளித்து காத்து நின்றோன் வாழ்க !
உரமுடைய அரக்கனவன் உத்தமியைக் கவர்ந்தே
ஊர்தியதில் வைத்து அவன் ஊர் நோக்கி செல்ல
வரமுடையோன் திறமுடையோன் வஞ்சகமும்
உடையோன்
கரமுடையோன், சிரமுடையோன் காமமதும்
உடையோன்
எனவறிந்து மனம் பதறி எதிரியைத் தடுத்தே
வனம்தனில் வாளரக்கன் வறுமையுறச் செய்தான்
சினமதனால் சிறகரிந்தான் செங்கண்ணன் அங்கே
மன்மொழி மெய்யடங்கிடவே மண்ணதனில்
வீழ்ந்தான்.
தனம்ருவு கனிமொழியாள் தனிப்பட்டதறிந்தே
தாசரதி நம்பியுடன் தன்னருகு சார்ந்தார்
என் உணர்ந்து ஈரமொழி கூறி உயிர்விட்டான்
என்பு குளிர் அனபு மழை தந்த இருபிறப்போன்
ஈமமதில் ஏற்றியதால் இராகவன் உயர்ந்தார்
என்றுமுள தேசமதில் வாழ்பவன் சடாயு !

# குகன்

நாவாயுதால் ஓதி, நல்வேள்வி செய்தும்
    நற்பதம் அடைவது அரிதானபோது
நாவாயதே கொண்டு நற்றம்பியாகி
    நான்கோடு ஐந்தாகும் நற்பேறு பெற்றான்
ஓவாது பணிசெய்து உடன்வந்த சேடன்
    உயர் பாதுகம் பெற்ற ஒரு பரதநம்பி
நாவாயடக்கி தினம் நற்றொண்டு செய்த
    நல்லவர் சுமித்திரையார் நற்செல்வன் போல
நாவாய் நடத்திவரும் வேடன் ஒரு தம்பி
    நானிலத்தில் அற்புதந்தான் நடந்தது வனத்தில்!
கன்றுக்காய் சினம் காட்டும் கறவைப் பசுபோல
    காகுத்தன் மேல் காதல் கரையற்றதாலே
கொண்டிட்டான் போர்க்கோலம் கோபவெறி கொண்டே
    குளிர்ந்திட்டான் வந்தவனை சொந்தமெனக் கண்டே
அன்புமலர் சூட்டிடவே அரண் ஒன்று உண்டோ
    இன்பமது சிறந்திடவே இதனின் வேறுண்டோ
துன்பமற தூயோன் குகன் அன்புவழி கண்டான்.
    துன்பமதைத் துடைத்திடவே
        தொடர்ந்திடலாம் வாரீர்!



# சுக்ரீவன்

வாடினான் வருந்தினான் வாலியின் மதத்தினால்
ஓடினான் உலகெலாம் உலர்ந்துடலம் வாடியே
தேடினான் உறைவிடம் திக்கெலாம் அலைந்தபின்
நாடினான் உருசிய மூகமே அடைக்கலம்
ஏழை சுக்ரீவனும் ஏற்றம்பெற்ற தெங்ஙனம்?
இலங்கைவேந்தன் தேவியை எடுத்துச்சென்ற வேளையில்
கலன்கள் வீசி கண்களால் கருணையைப் பொழிந்ததால்
விலங்கரசன் தானுமே வெற்றியை அடைந்தனன்.
நடுங்கிநின்ற வானரன் நல்ல நட்பலப் பெற்றனன்
நெடுந்துணையடைந்ததால் நலம் பல அடைந்தனன்
கடுங்குளிர் பொறுத்துமே காவலன் சினந்திட
ஒடுங்கிநின்றான் உத்தமன் உண்மைநட்பு அற்புதம்
பெற்ற பேறு கொஞ்சமோ பெரிய அரசன் ஆகினான்
உற்றுழியுதவிட உடனிருந்துதவினான்
உற்ற நண்பன் மாருதி தன்னையே உதவினான்
கற்ற கல்வி யாவையும் காகுத்தற்கே ஆக்கினான்
இலங்கைவேந்தன் மணிமுடி இற்று வீழச்சாடினான்
பிலங்கள் போன்ற கருணனின் மூக்கினைக் கடித்தனன்
கலங்கிடாது போரிலே கடமையை முடித்தனன்
விலங்கினத்தில் தோன்றியும் வீரன் தம்பியாகினான்
தம்பியர்கள் மூவரில் தனித்து நிற்பவன் இவன்
தாமரைக்கண் பார்வையால் தளிர்த்து பூத்த தனிமலர்
எம்பிரான் மனத்திலே இறுகிநின்ற வானரன்
என்புமே குளிர்ந்திடும் இவர்கள் நட்பு எண்ணிடில்.

57

# வீடணன்

புலத்தியன் மரபில் பூத்த புண்ணியா புகழின் மிக்கோய்!
சலத்தினால் சகத்தில் தீமைதனைச் செய்யும்
இனத்தில் வந்தும்
நலத்தினால் உயர்ந்தோன் பாதம் நண்ணினாய்
அதனால் இந்த
நிலத்தினில் நிலைத்து நின்றாய் நீள் புகழ்
பெற்றுவிட்டாய்
அண்ணனை அரக்கர்கோனை அறவழி தன்னில் மாற்ற
எண்ணினை இதங்கள் சொன்னாய்
ஏசினான் அரக்கன் உன்னை
சின்னவன் இந்திரசித்தன் சீறினான் தடுத்தானில்லை
பின்னவன் ஆனாலும் நீ பெரியவன் ஆகிவிட்டாய்.
கடற்கரை வீற்றிருந்த கருணையங் கடலைச் சேர்ந்தாய்
உடற்கரை போக்கவேண்டி உத்தமன் தாளில் வீழ்ந்தாய்
குளக்கரைக் கொக்கைப்போல குறிக்கோளை
அடைந்துவிட்டாய்.
உளக்கரை போக்கிக் கொண்டாய் உயர்பதம்
தன்னில் நின்றாய்
இளையவற்கவித்த மௌலி இறைஞ்சியே
பெற்றாய் மேலும்
இளையவற்கே அங்கே நீ இளவலாய்
இணைந்தாய் மற்றும்
இளையவள் சீதைக்காக இனிய நின்மகளைத் தந்தாய்
இறையும் நாம் மறவோம் என்றும் இறைஞ்சுவோம்
நினது பாதம்.

# விபாண்டகர்

எப்படிப்பட்ட முயற்சி அது?
எம்மான் விபாண்டகர் முயன்றிட்டார்?
தம் மகன் உருசிய சிங்கனையே
தியாகம் செய்ய நினைத்திட்டார்.
பழக்கம் மனிதனின் முதல் எதிரி
பாவத்துக்கெல்லாம் மூலம் அது.
உணர்ந்தவர் அதனால் தன் மகனை
உலகத்தினின்று ஒதுக்கிவைத்தார்
பெண் எனும் எண்ணமே இல்லாது
பேணிக்காத்தார் தன் மகனை
பெரியவனாக அவன் வளர்ந்தான்
பெருமிதம் கொண்டார் பெற்றவரும்
இறைவன் திருவுளம் யாரறிவார்?
இவர் அறியாமல் இனிய மகன்
இல்லற வலையில் வீழ்ந்திட்டான்
இயற்கையை வெல்ல இயலவில்லை
இருந்தும் விபாண்டகர் முயற்சியினை
இருநிலம் போற்றும் இறுதிவரை
மெய் ஞானியும் ஓர் விஞ்ஞானி
மேன்மைகொள் முனிவரைப் போற்றிடுவோம்.

# விசுவாமித்திரன்

எண்ணும்போதே இனிக்கிறது
எத்துணை பெரியவன் கோசிகனே
பிறப்பால் அரசன் முதலில் நீ!
பெருமை பெற்றாய் அந்தணனாய்.
பிறப்பும் இறப்பும் வென்றிட்டாய்
பேரானந்தக் கடல் கண்டாய்
காயத்ரி! அதைக் கற்பித்தாய்! அது
கற்பகமல்லவா மாந்தர்க்கு
உண்மைக்கொருவன் அரிச்சந்திரன் எனும்
உண்மையை உணர்த்திய உண்மை நீ!
உத்தமன் இராமன் மணம் முடித்தாய்
உரிய கலைகளை அவர்க்களித்தாய்
பத்தினி அகலிகை துயர் தவித்தாய்
பரமனே அவன் என உணர்ந்திருந்தாய்
எண்ணம் திண்ணம் ஆகிவிடில்
எதுதான் இயலாதுவ்வுலகில்
இன்னொரு இந்திர உலகினையும்
இயற்றிடலாம் என எடுத்துரைத்தாய்
மானிடன் வெல்லும் தோற்காது
மாமனிதன் நீ சாட்சியன்றோ!
உலகின் நன்மையானவனே
உத்தம விசுவாமித்திரன் நீ
உன்னின் உறுதியில் ஒரு துளியே
உலகை மாற்ற உதவிடுமே
பாரதச் செல்வரில் ஒருவன் நீ
பணிந்தோம் உந்தன் அருள் வேண்டி.

# சாலிகோத்ர மகரிஷி

—⁂—

சாலிகோத்ர மகரிஷி சத்தியத்தின் பிரதிநிதி
மாலவன் தன் மலரடி மன்னிநின்ற மாதவம்
காலவெள்ளம் கண்டுமே கலங்கவில்லை அற்புதம்
மாலவன் விருத்தனாய் மகிழ்ந்து அங்கே தோன்றினான்
'கால்கள் கைகள் ஓய்ந்தன கடுமையான பசியினால்
கருணைகொள்ளும் சாலியே! கவலை தீரும் சாலியே!
ஏதும் இல்லைஎன்னிடம் இருப்பதிந்த மாவுதான்
பேதம் இன்றி ஏற்றிடும் பெரிய இதயம் கொண்டு நீர்
மாவுதன்னை உண்டனன் மனக்களிப்பு கொண்டனன்.
மாதவ! களைத்தனன் மகிழ்ந்துறங்க எவ்வுளே?
கிடந்துறங்க வேண்டுமே! கிடக்கலாமே இவ்வுளே!
படம் எடுத்த பாம்பணை படுத்தனன் களிப்புடன்
நன்று, நன்று, நாதனே! நன்மை பெற்ற திவ்வுளே
நாளும் எம்மைக் காத்திடு, நானிலம் தழைத்திடும்
மாசிலாத சாலியே மகிழ்ந்தனன் தவத்தினால்
கூசிடாது பேசிடு கொண்டதென்ன நின்னுள்ளம்
'அவ்வுள்விட்டு இவ்வுளே அரவணை கிடந்தவ!
அடியவர்க்கு அருள்மழை பொழிந்தருள்க! வேண்டினேன்
அன்றுமுதல் அச்சுதன் அரவணையில் கிடக்கிறான்
அமலன் சாலி முனிவன் தன் சிரம் அணைத்துக்
கொள்கிறான்

தொண்டை நாட்டில் ஓர் தலம் துளங்கும்
என்றும் வைணவம்
தோன்றுகின்ற திருவ(ள்)ளூர் அஃதே அந்த எவ்வுளூர்
சாலிகோத்ர மகரிஷி சமைத்ததிந்த சன்னிதி
சகலருக்கும் நன்மையே சன்மம் தீர்க்கும் சன்னிதி.

## 61

# பக்தை மீரா

மீரா என்றால் மெய் உருகும்
நேராவரெவர் நிலவுலகில்,
பிறப்பும் வளர்ப்பும் நம்மைப் போல்
பேறு பெற்றதோ கோதையைப் போல்
நஞ்சும் உண்டவள் நம் மீரா
நமனையும் வென்ற நல் நங்கையவள்
கணவன் ராணா கண்களிலே
கள்ளத்தனமே புகுந்ததனால்
களங்கமற்ற பக்தியதை
கண்டித்திடுவான், கனன்றிடுவான்
ஊரார் கண்கள் உமிழும் தீ
உதடுகள் பேசும் பொய் வதந்தி
உத்தமியாளோ உயர்ந்து நின்றாள்.
உரைத்தது எல்லாம் ஒரு செய்தி.
உண்பதும் உணர்வதும் உரைப்பதுவும்
உத்தமன் கண்ணன் சரிதமது
என்பதி என்கதி என் நிதியாய்
இலங்கிடும் குலபதி கிரிதரனே !
இந்திய மண்ணின் இராகம் அவள்
இசைப்போம் என்றும் அவள் நாமம்
இல்லை உலகில் ஒரு பாவம்.



# திரிசடை

அனலிடை மலர்ந்த அரவிந்தம்
அரக்கியரிடையே மகரந்தம்
அன்னை தனக்குப் பற்றுக்கோல்
அற உணர்விற்கு ஊற்றுக்கால்
வீடணன் தந்த நற்செல்வம்
விளங்கும் இலங்கையின் மனச்சாட்சி
இராவணனாரின் வற்புறுத்தல்
இராட்சசிகள் தம் பயமுறுத்தல்
இராமபத்தினி மனஞ்சலித்து
இறப்பினை மிகவும் வரவேற்ற
இரக்கம் மிக்க சூழலிலே
இவர் தாம் கண்ட கனவினையே
இனிதாய் எடுத்துக் கூறியதால்
இனித்தது இராம காதையம்மா !
உலகோர் எல்லாம் ஒரு புறமாய்
ஒதுங்கிச் சென்ற நிலையினிலும்
இலங்கும் இராவணன் தம்பி மகள்
இருந்தாள் இலக்குமி தன்னுடனே
இராமனுக்கங்கே ஒரு தம்பி
இலக்குவன் நன்கு அமைந்ததுபோல்
இலக்குமி சீதைதான் பெற்றாள்
இனிய திரிசடைப் பெண்ணிவளை
இவளும் பாரதச் செல்வம்தான்
என்றும் பாடி உய்குவம் நாம்.

# திரௌபதி

பஞ்சவரில் ஒருத்தி இவள்
பாஞ்சாலம் தனக்குரியாள்
பாண்டவரின் உடைமையிவள்
பரமனுக்கே அடிமையிவள்
நெஞ்சதனால் பழியில்லாள்
நேரிழையாள் அகலிகையாள்
வஞ்சனையே யறியாதாள்
வாலிக்கு வாய்த்தவளே
வாளரக்கன் பிரித்ததனால்
வள்ளியவள் சிறையிலிருந்தாள்
வடுவில்லாப் பெண்மகளே
வாளரக்கன் மனைவியவள்.
ஐவர்க்கும் பத்தினியாய்-இவள்
அமைந்தாள் ஊழ்வினையால்
ஐவரிலும் அருமையிவள்
அளித்திட்ட சரித்திரமே.
கை சோர்ந்தும் மெய் சோர்ந்தும்
கணவரெலாம் கலக்கமுற
மைவண்ணன் நாமம் அஃதே
மங்கை இவள் மறக்கவில்லை.
கானிலே திரிந்த போதும்
கருத்திலே கண்ணன் வாழ்ந்தான்
கற்பினாள் கூந்தல் தன்னை
கண்ணனே முடித்து வைத்தான்
பாரமே தீர்த்து வைத்தான்
பரமனே, தனியாய் அல்ல !
பாஞ்சாலி பங்கு கொண்டாள்
பாரதச் செல்வியன்றோ.

# குமுத வல்லி

வாள்வலி கொண்டே நின்றவன் தன்னை
வாள் விழி தன்னால் வென்றவள் வல்லி,
பிறந்திறக்கும் சுழற் பின்னலை மாற்றி
பிறவா நிலைதனைக் காட்டிய வல்லி.
கணவன் பின்னால் நின்றிருந்தாலும்
கண் அவன் திறக்கக் காரணமானாள்.
மாலடியார் தனைப் பூசனை செய்தே
மன்னன் மகிழ்ந்திடக் கற்றது எங்கே?
மங்கை நல்லாள் இவள் மனச் சிறைப்பட்டே
மங்கையர் கோன்மன வாழ்ச்சியைப் பெற்றான்
அங்கமெலாம் திருமண்ணுடன் கோயிற்
பொறிகளுடன் அவன் திகழ்ந்திட்ட கோலம்
செங்குமுதம் அவள் காட்டிய பாதை
சென்றுகந்தான் அவன் செகம் புகழ்மேதை
குலுங்கிடும் அழகுடன் நின்றவர் தம்மை
கொள்ளையடித்ததும், பெற்றதும் வாழ்வு !
குன்றென ஓங்கிய மாலருட் செல்வம்
குவித்திடச் செய்தவள் குலமகள் வல்லி !
இன்று நம் செவிகளில் அருளிச் செயலாய்
இன்தமிழ் பாயுது கலியன் ஒலியாய் !
இத்தனைக்கும் கரு இனியதோர் வல்லி
இசைப்போம் அவள்புகழ் பெயரினைச் சொல்லி.

# கோபியர்கள்

என்ன தவம் செய்தனர், ஏழை இடைச் சாதியர்
முன்னுமில்லை பின்னுமில்லை முகுந்தனுடன்
வாழ்ந்தனர்
கண்ணனாக வந்தனன் கையில் வேய்ங் குழலுடன்
பொய்யுரைகள் பேசியே புதுமை பல செய்தனன்
விண்ணவரின் வேந்தனும் வெண்ணெய்க்காக வாடினான்
மண்ணை உண்டும் பெண்ணை உண்டும்
மாயமெலாம் காட்டினான்
பெற்றவாய்ச்சி தேவகி பெரிதுவந்த (ய)சோதையும்
பிரியமாம் ராதை, பின்னையார் பெற்றபேறு
கொஞ்சமோ,
உரலும் மரமும் கயிறுமே உற்ற நண்பராகிட
உத்தமன் கோபாலனும் உகந்திருந்த கோகுலம்
தொட்டிலில் கிடந்தனன் தோகையர் மகிழ்ந்தனர்
கொட்டிலில் அலைந்தனன் கோகுலம் புரந்தனன்
பட்டி தொட்டி எங்குமே பாதம் நோகச் சென்றனன்
மட்டிலாத புழுதியில் மகிழ்ந்து விழுந்து புரண்டனன்
புழுதிமேனி கண்டவர் பூசுரர்களாயினர்
புதுமையான தெய்வமே பூமிதனில் கண்டனர்
வெள்ளிநிலா வெண்மணல் வேணுகானம் தென்றலே
துள்ளியோடும் யமுனையின் தூயநதிக் கரையிலே
தன்னையே மறந்ததும் தலைவனுடன் குரவையும்
முன்னமே நடந்தது முழுமையான இன்பமே
பின்னவர் நாம் கேட்கையில் பேரின்பமே மிஞ்சுது
என்ன புகழ் பெற்றனர் ஏழை இடைச் சாதியர்
மன்னுபுகழ் என்பதும் மண்ணில் இஃது ஒன்றுதான்
என்ன தவம் செய்தனர்? எக்குருவை நாடினர்?
கண்ணன் அவன் தன்னையே கற்கும் சீடராயினர்

பேச்சில் மூச்சில் கண்ணனை பெரிதும்கொண்ட
ஆய்ச்சியர்
பிச்சியராய் நின்றதால் பெரியபேறு பெற்றனர்.
எண்ணி எண்ணிப் பார்க்கிறோம்
இறைவனவன் லீலையை
கன்னியராம் கோபியர் காதலதைப் போற்றுவோம்
உண்ணும் சோறு நீரெலாம் உத்தமனேயென்றவர்
உள்ளந்தன்னைப் பெற்றவர் உயர்ந்தவரே
போற்றுவோம்.

# அரியவன்

துயரமறத் துயரமுறத் தூணில் கிடந்தவன்
தயையுடைய திருமுகத்தைத் தானே மறைத்தவன்
அயர்வுடையச் சிறுவனவன் ஆபத்துணர்ந்தவன்
அரியுருவில் அரியவனை ஆய்ந்தேயழித்தனன்
நரவரியாய் இரணியன்தன் ஆகம் பிளந்தவன்
சிறுவனவன் குறை களைய தூணையுகந்தவன்
திருமகளை ஒருபுறமாய் சேர்த்தேயணைத்தவன்
வருபவரின் குறைமுழுதும் போக்கிக் களிப்பவன்
அருமறைகள், அறிவறியத் தானம் அமர்ந்தவன்
அரியுருவில் அனைவருக்கும் தானேயருள்பவன்
உளனவனே எனவினவும் தந்தையுணர்ந்திட
உளனவனே யுலகமெலாம் என்றே உணர்த்தினன்
களையதனை களைந்திடவே கண்ணன் உதித்தனன்
கவலையிலை கவலையிலை கண்டே பணிந்திடும்
அரியிவனே ! அறியுமினே ! ஆபத்து வருமுனே
அரியவனின் அடியிணைகள் அடியார்க்கணித்தவே !



# திருவரங்கன்

காவிரியாள் காதல்கொண்டே
கையிரண்டாலணைப்பாள் !
காதலனும் களிமிகவே கவலையின்றிக் கிடப்பான்
பூமகளாள் புரிந்துகொண்டே புன்னகையை உதிர்ப்பாள்
புவிமகளும் மடம்மிகவே புதுமைமிக ஒளிர்வாள்
வீடணனார் விட்டுச்சென்ற விண்ணமுது பாரீர்
விளங்கிடும் செங்கண்ணழகே வியக்கவைக்கும் வாரீர்
மாதவர்கள் கண்டுவந்த பாதமலர் காணீர்
மாநிலத்தீர் ! மகிழ்ந்திடவே மாலவனைப் பாடீர்
பாணர் அவர்பசதம் முதல் பாடிநின்றார் பாடல்
பாமரரும் தேடிவரும் பாலமுதக் கூடல்
காணும் கவிவாணர்களும் கற்பனை மீதூறக்
கற்கண்டெனக் கவிதருவார் காதுகள் போதாவே.
பாவையவள் பாவைதனில் பாவியங்கள் செய்தார்
பரமனவன் பள்ளியிலும் பங்குபெற்றாள் மங்கை
பூதபுரியார் இதயம் பூரித்ததுமிங்கே
புகழும் மணவாளன் அவன் புதுமை செய்தானங்கே
ஓமெனவே கோபுரமும் ஓங்கும் புகழ் தேங்கும்
ஒளிரும் மலர்த் துகிலுக்குள்ளே உடல் மறைப்பின்
பொன்னி
காலமெலாம் போக்கிடுவாள் காமனவன் தாதை
கண்டு கண்டு தொழுதிடலாம் கலியுகத்தில் நாமே.

# திருப்பாணாழ்வார்

—※—

பாணர் குடிப்புகழ் பெருக்கித் திகழ்ந்தார் வந்தார்
பரமனவன் எழிலதனைப் படித்தார் வந்தார்
கானமழையதைப் பொழிந்தே களித்தார் வந்தார்
கமலமுகம் கண்டு கண்டு உகந்தார் வந்தார்
கார்த்திகையில் (உ) ரோகிணியில் பிறந்தார் வந்தார்
கார்மேனி நிறைகொண்ட நெஞ்சார் வந்தார்.
பாம்பணையில் கிடந்தவனைப் பாடிப் பாடி
பரமசுகம் அஃதென்றே தெளிந்தார் வந்தார்
முனிவனவன் முனிவதனைக் கெடுத்தார் வந்தார்
மூலம் அவன்தானென்றே மொழிந்தார் வந்தார்,
கண்ணெதிரே கண்டதெல்லாம் அரங்கநாதன்
கருத்ததிலே வேங்கடத்தைப் பதித்தார் வந்தார்.
தொண்டர்க்கெல்லாம் தொண்டனென்றே
திகழ்ந்தார் வந்தார்
தூய நற்றேசிகனார் உகந்தார் வந்தார்
பண்டை மறைப்பொருளையெலாம் அறிந்தார் வத்தார்
பாண்பெருமாள் எமையாள வந்தார் தாமே.

# திருசங்கம்

முத்தன்ன வெண்மை நிறத்தோய்
மூவாமுதல்வன் தன் கரத்தில் திகழ்ந்தோய்
கத்துக் கடலில் உதித்தாய் அன்று
கௌரவர் வெருக்கொளக் கர்ச்சனை செய்தாய்.
(முத்தன்ன)

கற்பூரம் போலே மணப்பாய்
கமலப் பூவென உன்னை கண்டார் துதிப்பார்
நற்போது போக்குவார் உன்னை
நாவாரப் பாடியே நற்பேறு பெற்றார்.
(முத்தன்ன)

கோதைத் தமிழில் குளித்தாய்
கோதிலாத் துருவன் தன் கன்னம் உணர்ந்தாய்
யாதுனக்கியலாததிங்கு? அந்த
யாதவன் வாயமுதம் உனக்கே எப்போதும்.
(முத்தன்ன)

பிறப்பால் சிறப்பில்லை கண்டாய்
இருப்பால் இறப்பில்லா இசையை நீ கொண்டாய்
பிறக்காது உன்னை என் நெஞ்சம்
மனதுக்கு இனியவா நீயே என் தஞ்சம்.
(முத்தன்ன)

# ஸ்ரீ சுதர்ஸன்

உன்னைக் காணாக் கண்களெல்லாம்
கண்களல்ல புண்கள்
உண்மைத் தெய்வம் நின்னையல்லால்
வேறு யாருமில்லை.
கண்ணைக் கொள்ளை கொள்ளும்
வண்ணம் உள்ள தெய்வம் நீயே.
கதிரவர்கள் கோடி சேர்ந்த
காட்சியருளும் தாயே.
எண்ணும் எண்ணம் முடியச் செய்யும்
எழிலரசன் நீயே.
எதற்கும் இங்கு கவலையில்லை
எனது காப்போன் நீயே.
முன்னும் பின்னும் அடியெடுத்து
விளங்குகின்ற தாயே.
முழுதும் என்னை உனக்குத் தந்தேன்
முதற்பொருளே நீயே.
அம்பரீஷன் தன்னைக் காத்த
அருட்கடலும் நீயே.
ஆனையன்று அழுதபோது
அபயம் தந்த தாயே!
அழகன் கையில் குடியிருந்தாய்
அழகுத் தெய்வம் நீயே!
அதனால் ஆழ்வார் அகம்
மகிழ்ந்தார் ஆடிப்பாடி நாளும்!

# புதுமை தம்பதியர்கள்

—※—

*பொன்னன் :*

மேலிருந்து கீழிறங்கி வந்த எம்பிரான்,
மேன்மை தோன்ற மீனுமாகி நின்ற எம்பிரான்
ஆமையாகி அமுதுதந்த ஆதிநாதனே
அருளதாலே பன்றியாகி அகிலம் காத்தவன்
எம்பிரானின் பெருமை தன்னை எடுத்துச் சொல்லவோ
எளிதாய் நின்னை வாதப்போரில் எதிர்த்து வெல்லவோ

*பொன்னி ;*

எம்பிராட்டி பெருமை தன்னை எடுத்துச் சொல்லவோ
எளிதாய் நின்னை வாதிலிங்கு எதிர்த்துவெல்லவோ
எம்பிராட்டி இல்லையென்றால் என்னவாகுமே
எம்பிரானின் இதயமான செல்வமல்லவோ,
செங்கதிர்தன் சுடரிவள் தான் செகத்தின்நாயகி
சேர்ந்தவன்தன் மார்பரங்கில் சிறந்து நிற்பவள்
எந்த பிறவியாகிலென்ன இணைந்து நிற்பவள்
எம்பிரானை விட்டகன்றதில்லை எங்குமே !

*பொன்னன் :*

மீனோடாமை பன்றியான போதில் இலக்குமி
மிளிர்ந்ததெங்கு சொல்லடி நீ மீனலோசனி?

*பொன்னி :*

மீனோடாமை பன்றியான போதில் இலக்குமி
மிளிர்ந்ததவர் கண்களில்தான் அறிந்து கொள்ளுவாய்.

*பொன்னன் :*

தூணில் அவன்வந்தபோது மானெங்கிருந்தாள்?

பொன்னி :

தூயோன் நரன் மார்பினிலே தூக்கித்திருந்தாள்.

பொன்னன் :

தூயோன் நரன் மார்பினிலே தூக்கம்
கொண்டதேன்?

பொன்னி :

இரக்கம் கொண்ட இறைவனனவன்
அரக்கன் வீட்டிலே
இருந்த தூணில் மறைந்திருந்தான் இருந்து
போகட்டும்
இரக்கமற்ற இரனியனால் வதைக்கப்பட்டனன்
இதயவரை தாங்கவில்லை இறைவி நொந்தனள்!

பொன்னன் :

ஒருகுறளாய் இருநிலம் மூவடியை வேண்டியே
இறைவன்வந்தான் இறைவியங்கே எங்கிருந்தனள்?
இறைவன் கொண்ட கோலமதோ பிரம்மசர்யமே!
இறைவியுடன் இருப்பதென்றால் ஆச்சர்யமே!

பொன்னி :

வாமனனாய் வந்தபோதும் வல்லி வந்தனள்,
வாழிடமாம் இதயம்விட்டு நீங்கினாளலள்,
வாமனனும் வல்லி கண்டு புன்னகைத்தனன் தன்
மானுடையால் மங்கை தன்னை மறைத்துக்
கொண்டனன்!

பொன்னன் :

பரசுராமன், பலராமன் பாரில் வந்தனர்
பத்மவல்லி அவர்களுடன் எங்கே இருந்தனள்?

பொன்னி :

பரசுராமன், பலராமன் ஆவேசங்கள் அதில்
பத்மவல்லி தானும் அனுப்ரவேசங்கள்.

*பொன்னன் :*

இராமனைப் போல் இடருற்றார் இங்கு யாருளார்
இரக்கமெனும் கடலவனை இறைஞ்சிப்
போற்றுவேன்.

*பொன்னி :*

இலக்குமியாள் சீதையைப் போல்
இடருற்றார் எவர்?
இருஞ்சிறையில் இருந்த ஏற்றம் இராமாயணமே.

*பொன்னன் :*

காடு, மலை, முள்ளு கல்லு கடந்துவந்தானே! பெரு
நாடு நகர் நீத்து ஒரு நாடோடியானான்
தந்தையையும் இழந்துநின்றான் தாரத்தைஒருவன்
தயவின்றியே சிறையில் வைத்தான்,
தாங்கிக் கொண்டானே
வேடன், விலங்கு அரக்கனென வேற்றுமையின்றி
வேண்டிய நற்தம்பிகளாய் விருப்பொடு ஏற்றான்
கும்பனுக்கும் கோரிக்கையை கூட்டி வைத்தனன்
கோடிமுறை வணங்கிடுவேன் குலபதி இராமன்.

*பொன்னி :*

மன்னுபுகழ் கோசலையின் மதலையாய் வந்தான்
மணிவயிற்றில் பனிரெண்டு மாதங்கள் கிடந்தான்
நாட்டைவிட்டு நகரைவிட்டு நடந்திட்டபோதும்-நல்
தம்பியை விட்டகன்றதில்லை வில்லம்புகையில்
சுற்றமென வீடணனும் சுக்ரீவன் உண்டு
சேவைக்கொரு மாருதியைச் சேர்த்துகொண்டனன்

சேது கட்ட வந்தவர்கள் ஆயிரம் கோடி
செல்வியவள் சீதை பாவம் மண்ணில் பிறந்தாள்
செல்வியென வளர்த்தவரோ சிறந்த துறவி
காத்திருந்து காத்திருந்து கண்ணனைக் கண்டாள்
கண்மணியாள் கண்ணிமைபோல் காத்தனள் கண்ணன்,
காடெதற்கு? நாட்டிலிரு கணவன் கட்டளை

கணவன் கடனை தீர்ப்பதற்கு மனைவி மாறினாள்,
கானகத்தில் திரிந்தனளே கண்டது துன்பம்!
காகுத்தனின் கடமைக்காக கணவனைப் பிரிந்தாள்
பத்துமாத சோகவனம் பரிதவித்தனளே
பசியை மறந்து பாயை மறந்து பரிதவித்தனளே
பாவியவனின் பசப்பு உரைகள் காதை துளைக்குமே
படரும் இரவும் காமத்தீக்கு விறகு கொடுக்குமே
உள்ளம் உரை செயலவற்றில் உத்தமன் நினைவே
உருக்கும் காமன் துளைத்தபுண்ணில் அவனது உருவே!
இருக்குமிடமும் இராவணனார் தூதுவல் காவல்
இரவும் பகலும் இராமனுக்கு மனத்தினை ஏவல்.
உவர்க்கடலை உறிஞ்சிவிடும் துயர்கடல் நடுவே
உத்தமியாள் பட்டபாடு உனக்கென்ன தெரியும்?
இராமனுக்கு உதவிசெய்ய இலக்குவன் உண்டு
இலக்குமியாள் சீதைக்கிங்கே யாரையா உண்டு
திரிசடையாள் ஒருத்தி உண்டு புதியவள் தானே!
திரிசங்காய் கிடந்திட்டாள் திடசித்தம் கொண்டாள்
பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டு புலம்பினாள் பூவை
மறுமைக்கே சென்றிடவும் மனம் துணிந்தாளே,
மாருதியால் மாறிநின்றாள் மங்கை நல்லாளும் !
சனகனையே இறந்ததுபோல் கண்டு கலங்கினாள்
சானகியாள் பட்டதெல்லாம் சனங்களுக்காக
இராமன் வந்தான் இலங்கையிலே இராவணன்தோல்வி
இலங்கைதனை தம்பிபெற்றான் எங்கும் அமைதி !
சானகியாள் சிறையைவிட்டே சடுதியில் வந்தாள்
சானகிராமன் பதமே பணிந்து எழுந்தாள்.
சானகியே எழுந்திடுவாய் சற்றிதைக் கேள் நீ!
மானமிலா தெதிரியிடம் சிறையிலிருந்தாய் !
மங்கையுந்தன் கற்பினுக்கோர் மாசில்லையென்று
சங்கையற அறிந்ததன்பின் சார்ந்திடு என்னை !
மங்கையவள் மனம்எரிய தீயில் விழுந்தாள்
மனம் சுடவே தீக்கடவுள் மனமும் கொதித்தான்,

சங்கையில்லை சங்கையில்லை சத்தியம் சாமி
மங்கையிவள் மாசற்ற பங்கயத் தங்கம்
எங்கள் சீதை பெருமை என்ன, உணர்ந்து கொண்டாயா
உங்கள் இராமன் கூட இதை ஒத்துக்கொள்ளுவான்,

பொன்னன் :

கண்ணனாக வந்தபோது உருக்குமணி தேவி
கண்மணியாய் இருந்ததுண்டு கடமை
என் செய்தாள்?

பொன்னி :

கண்ணனுக்கு ஏற்ற மங்கை கோதை பிராட்டி
கண்ணனையே ஆட்டிவைத்தாள் மாலைகள் சூட்டி

பொன்னன் :

ஸ்ரீனிவாஸன் மலையதன்மேல்
தனிக்கட்டை தானே.

பொன்னி :

''ஸ்ரீனிவாஸன்'' என்றால் உனக்குப் பொருள்
தெரியாது.

பொன்னனும், பொன்னியும் :

புரிந்து கொண்டோம்—நாம்
புரிந்து கொண்டோம் அவர்
புதுமைத் தம்பதியர்கள்
புரிந்து கொண்டோம்

மணியென, ஒலியென, மதியென, ஒளியென
நிதியென, பயனென, கதியென, விதியென
நதியென, புனலென, சதியென, பதியென
தருவென, நிழலென, கதிரென, சுடரென
அழகென, அறிவென, அருளென, அமுதென
முழுவதும் அவரது முழுநலமென
இவண். (புரிந்து)

# ஸ்ரீநிவாஸாஷ்டகம்

மீனாகி ஆமையென பன்றியென பாலனழ
மேலான சிங்கமானாய்
வானோரும் வணங்கிடவே வலிவணக்கு மாவலிமுன்
வாமனன் ஆகிநின்றாய் !
கோனானோர் குலம் நடுங்க சமதக்(கி)னி
குமரனென கோடரியுடன் வந்தனை
தானான திருமேனி கொண்டவ! தலைவநின்
திருவேங்கடம் வாழ்த்துவோம் !
கானம் திரிந்தாலும் கண்ணோட்டம் குறையாத
கருணைமிகு காகுத்தனே !
மோனம் கலைத்திட்ட மோகன ராமனே !
முனிவர்களும் மயங்கி நின்றார் !
தானம், தவம் ஒன்றும் அறியாத குகனையும்
தம்பியாய்க் கொண்ட தேவே !
வானம் தொடும் மலைமீதே வசிக்கின்ற
வசசனே வணங்குகின்றேன் !
கண்ணன் எடுத்திட்ட கோவர்த்தனம் முன்பு
கல்மாரி காத்ததன்றோ !
கல்மலை இன்று அக்கண்ணனைத் தாங்கியே
கடனைக் கழித்து நிற்க !
கல்போன்ற நெஞ்சமும் கனியாக மாறிடும்
கண்ணா உன் பார்வை பட்டே !
கல்லாதவன் எனை கைதூக்கி விட்டிடு;
காலைப் பிடித் தழுகிறேன்.
சீதேவியாள் தனை சேர்த்தேயணைத்தனை
சீதரா ! செகந்நாதனே !
பூதேவியாள் மனம் பூரித்து நின்றனள்
பொன்மலையாக இங்கு !
மாதேவியார் பலர் மன்னர்கள் சூழவே
மாலடி பணிந்து நிற்க !
ஏதேனும் ஓரிடம் இதுபோல உள்ளதோ
இல்லையே, இல்லை ! இல்லை !

மதுராந்தகம் எனும் மாநகர் தன்னிலே
மங்கைக்கு ஓர் ஆலயம் !
துதிபாடும் அன்பர்கள் நிதம் சென்று சேருவர்
தூயவன் ஸந்நிதானம் !
பதியான தெய்வமாம் வேங்கடாசலபதி
பக்கத்தில் நின்றுகொண்டே !
துதிபாடுமன்பரின் தொல்லைகள் தீர்க்கிறார்
தூய நற் சந்நிதானம் !
வேதாந்த தேசிகர் விளங்கு ராமானுஜர்
விளங்கிடும் ஸந்நிதானம் !
வேதாந்தமாகியே விளங்கிடும் வேங்கடாசலபதி
அருள் செய்யவே !
கீதா ரதத்துடன் கோதா மணாளனே
போதனை செய்யும் கோலம் !
சாதா மனிதரும் சாகாவரம் பெறச்
செய்திடும் ஸந்நிதானம் !
எட்டாம் எழுத்துடை எண்பதம் அருள்செய்யும்
எட்டெழுத்துடைய தேவே !
எட்டாத பதமுடை எழிலுடை மன்னனே
இறங்கியே வந்ததென்ன !
எட்டாது உன்அருள் இழிபிறவி பெற்ற எம்
ஈனமாம் நெஞ்சினுள்ளே
எட்டாகப் படியமை எழிலுடைக் கோயிலில்
எளிதாக வந்ததென்னே !
கண்பெற்ற பயனுனைக் காண்பதே தேவனே
கமலவல்லிதன் அருகிலே !
கால்பெற்ற பயனுந்தன் கலைக்கோயில் வலம்செய
காதுகள் புகழ் கேட்டிட !
வாய்பெற்ற வாய்ப்புநின் வசையில் புகழ் சரிதமே
வாயாரப் பாடவேணும்
சேயாக நிற்கிறாய், தாயாக காக்கிறாய்
மாலவன் மார்பிலுறைவோய் !

# ப்ரபந்நனது கடமை

ப்ரபந்நன் என்பவன் யாரெனக் கேட்டால்
ப்ரபத்தியை அனுஷ்டித்தவன் தானே
பிறஉபாயங்கள் தேவையுமில்லை
பிறவா பெரும்பேறு நிச்சயம் தானே (ப்ர)

நித்ய நைமித்ய கார்யங்கள் செய்வான்
நேமியான் அவன் நேசத்தை வேண்டி
சக்திக்கேற்ற நற்தொண்டுகள் செய்தே
சாத்திரங் களைபோற்றியே நிற்பான் (ப்ர)

வேறு பயனை விரும்புவதில்லை
ஆறும்பயனும் அவனன்றி இல்லை
கூறும் ஆசான் குணங்களைப் போற்றி
குற்றமில்லா உணவினை உண்பான் (ப்ர)

சத்வ குணத்தைச் சார்ந்திருப்பானே
சந்ததம் த்வயத்தை உச்சரிப்பானே
நித்ய திருவாராதனம் செய்தே
நிமலன் புகழே நினைத்து மகிழ்வான் (ப்ர)

பாகவதர்களைப் போற்றி மகிழ்வான்
பரமாசார்யனின் நாமம் புகழ்வான்
மேகவண்ணனாம் நாரணன் அன்றி
மேதினித் தெய்வம் ஏதும் அறியான் (ப்ர)

நாரணன் அவனே முழுமுதற் தெய்வம்
பூரணன் தன்னைப் போற்றி நாம் உய்வோம்
காரணன் அவனே காரியமாவான்
கற்றவன் ப்ரபந்நன் நற்பதம் வாழ்க. (ப்ர)

# காளிங்க நர்த்தனம்

தத்தளாங்கு திமிதிமி என
தளாங்குதிமி தளாங்கு என
கண்ணன் என்னும் மன்னன் நடனமாடினான்
காளிங்கன் தலையில் கூத்தாடினான் (தத்)

விண்ணும் மண்ணும் மகிழ்ந்து ஆட
வீண் அசுரர்கள் அலறி ஓட
கன்றும் பசுவும் கவலை நீங்கி
கலகலவென குதித்து ஓட (தத்)

அகில உலகையளந்த பாதம்
அகலிகை குறை தீர்த்த பாதம்
இகபர சுகமளிக்கும் பாதம்
இங்கு பாம்பின் மீது ஆடும் (தத்)

குடித்ததெல்லாம் பூதனைப்பால்
குழந்தை கண்ணன் அடி மிதிப்பால்
எழுந்து எழுந்து விழும் தலைகள்
அழுந்த அழுந்த மிதித்து வந்தான் (தத்)

உன்னையும் என்னையும் காக்க வேண்டி
உரலில் தன்னைக் கட்டிக் கொண்டு
அன்னையின் சொல்லை மீறிக் கொண்டு
ஆற்றில் குதித்து அரவம் மீதில் (தத்)

காலில் சதங்கை கலகலவென
காளிந்தி மடு கடலென எழ
காளியன் தலை கவிழ்ந்திரங்கிட
காண்பவர்கள் கரம் குவித்திட (தத்)

அன்னையர்கள் கதறக் கதற
அரவத்தின் உடல் உதற உதற
ஆயர்கள் அங்கு பதற பதற
அழகுக் கண்ணன் முறுவல் மிளிர (தத்)

## 83

# அவதாரம்

ஒரு கனி விதையாகிறது
தெரு மண்ணில் விழுகிறது
துளிர்க்கிறது தளிர்க்கிறது
தூமலர்கள் அளிக்கிறது
தருவெனவே சிறக்கிறது
தமர்களுக்கு இனிக்கிறது
தண்ணளியால் கனிகளையே
தருகிறது தருமமது
வாழ்க்கைப் புத்தகத்தை
வரிவரியாய்ப் படித்தவள்தான்
வாழ்வு எதுவென்று
வக்கணையாய் உணர்ந்தவள்தான்
தாய் என்ற விருததனை
தரணியிலே பெற்றவள்தான்
சேய்க்காக இன்று அவள்
சேயாகி நிற்கின்றாள்
பின்னால் ஓடுகிறாள்
பெருமூச்சிரைத்திடவே
பின்னைக்காய் தேர் செய்து
பிள்ளையுடன் ஆடுகின்றாள்
முன்னதற்காய் பின்னவளும்
பள்ளிக்குத் துணையாவாள்
முழு விருந்து செய்திருந்தும்
மூச்சடக்கி தவமிருந்து
குழந்தையுடன்தான் ருசிப்பாள்
குதூகலமே அதுதானே
ஒன்று இரண்டாய் விரல்விட்டு
கன்றுக்காய் கணிதமதை
நன்கு தேர்ந்த ஞானத்தாய்
நலமுடனே ஊட்டிடுவாள்
தன்னைப் போல் குழந்தையையும்
அன்னையவள் ஆக்கிடவே
தன்னையவள் இழக்கின்றாள்
தாய் அதனால்தான் தெய்வம்.

# அர்ச்சகன் யார்?

பன்னிரு நாமம் பதுமமணி
பளபளப்பாக அணிந்திடுவான்
தன்னைப் புனித மலராக்கி
தலைவன் பாதம் அலங்கரிப்பான்
கோயிலை நாடி வருவோரின்
நோயினைத் தீர்க்க உதவிடுவான்
தாயினைப் போல தனியன்பு
தந்திடுவான் நல்லர்ச்சகனே
கல்லாய் நிற்கும் திருவுருவை
கனியாய் மாற்றும் கலைஞனவன்
கனியின் சுவையை யறிந்தோர்க்கு
கலியின் கொடுமை கிடையாது
உள்ளார் இல்லார் எல்லோரும்
ஒருவன் இறைவன் முன்னிலையில்
என்றே எண்ணிச் செயல் புரிவான்
என்றும் நல்ல அர்ச்சகனே
இனிமை எளிமை இறைபணியே
இதமாம் பேச்சு குளிர் பார்வை
கனிவு கடமை கல்வியுடன்
பணிவும் கொண்டவன் அர்ச்சகனே.

# திருவேங்கடவா

—※—

பொய்கையும் பூதமும் பேயும் புகழ்ந்திடும்
—மைவண்ண மேனியனே !
செய்கை மறந்துனைச் சேர்ந்திடு மாறனின்
—செஞ்சொல் பயின்றவனே !
வையமளந்தவா ! நின்னையும் தொட்டிலில்
—இட்டனன் விட்ணு சித்தன் !
துய்யகுலம் புகழ்சேகரன், பாணனே
—மழிசையன், மங்கை மன்னன்.
ஐய, உனைப் புகழ்ந்தேத்தினர்; ஆடினர்
—பாடினர் பைந்தமிழில்;
கைகளில் சங்குடன் சக்கரம் கொண்டனை
—காயாம் பூ மேனியனே !
பொய்யினில் வீழ்ந்தனன் புண்பட்ட நெஞ்சினஃ
—போக்கிட மற்றில்லையே !
உய்வழியானவா, ஓங்கி வளர்ந்தவா
உன்னடி தஞ்சமையா.

# கண்ணன் யார்?

கண்ணன் யாரென்றே கம்சனிடம் யான் கேட்டேன்
கனலென்றான் கஞ்சன் கருணையதை வெறுத்ததனால்
கண்ணன் யாரென்றே துரௌபதியை யான் கேட்டேன்
கனிவான கண்ணமுது மனவின்பம் அவன் என்றாள்
கண்ணன் யாரென்றே காண்டீபனிடம் கேட்டேன்
மன்னன் அறிவினிலே மகிழ்விக்கும் உயிர் நண்பன்
கண்ணன் யாரென்றே காங்கேயனிடம் கேட்டேன்
தன்னையழித்தேனும் தன்னையடியார் தலைமீட்பான்
கண்ணன் யாரென்றே கர்ணனையான் கேட்டுநின்றேன்
கர்ணனுக்கும் தாயளித்த கருணைத்தாய்
அவன் என்றான்
கண்ணனையே கேட்டேன் கண்ணா நீ யாரென்று
கண்ணாடிதனில் காண்க, கண்ணன்தனைக்
கண்டிடுவாய்.

# விடலரிய வீரக்கரங்கள்

சிறையிருந்த பெருமகனின் சீர்மையுகந்தன
வரையெடுத்தா நிரைபுரந்து வாகையணிந்தன.
குறையுடலமுடைய வணில் கூடிக்களித்தன
குரைகடலின் திருவமுதைக் கொண்டேவணைத்தன.
பிறையுடையவனின் குறையைப் போக்கிச் சிறந்தன
வரையதனில் உறையுமவன் வாட்டம் தவிர்த்தன
முதுபறவையதன் கடனை செய்தே முடித்தன.
விதுரனவன் விருந்ததனில் விளங்கிச் சிறந்தன
பதியவளின் பதியெனவே கூறை கொடுத்தன
பலியவனின் பலமழியப் பாங்காயிரந்தன
விளவதனைக் குனிலதனால் வீடித்தகைத்தன
விளங்குசுடர் தனைமறைத்தே தேரில் பொலிந்தன
கனியதனைக் களிப்புடனே காட்டில் உகந்தன
கருணையுடன் இரணியன்தன் ஆகம் பிளந்தன
படைகளவை கதிர்மதியம் பாங்காய்ச் சுமந்தன
விடலரிய குணமுடைய வீரக்கரங்களே.

# மதுராந்தகம் ராமன்

கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாகிறான்
காகுத்தன் கண்ணாலே வரவேற்கிறான்
மன்னவனை மர உறியில் காண வாரீர்
மகிழமலர் மணந்தனையும் நுகர வாரீர்
பெண்ணவளின் நாணமதைப் பேசப்போமோ,
பிரியாத தம்பி அதோ கண்டு கொள்வோம்
கண்ணாடி அறையதனுள் மூவர் கண்டே
களிக்காத கண்கள் வெறும் புண்கள் தாமே
மகிழ மர நிழல் செய்தபேறு என்னே
மாதவன் தன் பெயர் கேட்டு மலர்ந்ததென்னே
கனகவல்லி சகம் காக்கும் கமலவல்லி
சகலருக்கும் அருள் சேர்க்கும் சேமவல்லி
சக்கரத்தான் கோயில் இதோ! சார்ந்து வாரீர்
சன்மம் இல்லை சன்மம் இல்லை சாபம் போக்கும்
சேர அடி தீரும் வினை செல்வராவீர்
செகமெல்லாம் செழித்திடுமே சேர்ந்து வாரீர்.

---

3—2—93 மதுராந்தகம் ஸ்ரீ ஏரிகாத்த இராமன் ஸந்நிதி (ஸம்புரோக்ஷணை) நன்னீராட்டு விழாவன்று வெளியானது.

# தேசிய ராமன்

விண்ணுலகில் விதையானான்
மண்ணுலகில் பயிரானான்
அன்புலகில் உயிரானான்
அறஉலகில் கருவானான்
வேடனுடன் நட்பானான்
விலங்குடனே உறவானான்
கரடியுடன் கைகோர்த்தான்
கழுகுக்கும் மகனானான்
முனியுலகைப் பணிந்திட்டான்
முழு உலகில் மூழ்கிட்டான்
அரக்கனிடம் அருட்பார்வை
அணிலுக்கும் அரவணைப்பு
மயில், காகம், மரம், மலைகள்
மண்ணகத்தில் உறவினர்கள்
மனிதனாக வந்தவன்தான்
புனிதனான நெறியாளன்
இனிய இராமன் தேசியனை
இதயக் கோயில் சேர்த்திடுவோம்.

# தீராத விளையாட்டுப்பிள்ளை

தீராத விளையாட்டுப் பிள்ளை கண்ணன்
திக்கற்ற பெற்றோரின் திகில்போக்கும் பிள்ளை (தீராத)

1. ஏடாக எதிர்வந்து நின்றான் - எழுது
கோலாகவும் ஆகி எழுதுக என்றான்
என்ன நான் எழுதுவேன் என்றேன் அவன்
என்னையே எழுதுக எழுதுக என்றேன் (தீராத)

2. கண் என்றால் இடமென்று சொல்வார் கண்ணன்
இல்லாத இடமில்லை பொருளில்லை கண்டீர்
மண்பெற்ற பயன் என்ன சொல்வேன் இந்த
மண்ணையும் வெண்ணையாய் எண்ணியே
உண்டான் (தீராத)

3 பாலகன் என்றே நினைத்தாள் - பாவி
பாலூட்டியேயவனை பழிதீர்க்க வந்தாள்
பாலோடும் நஞ்சு சேர்ந்திடுமோ பரமன்
பாலோடும் பாவியவள் உயிரைக்குடித்தான் (தீராத)

4. படைத்தவன் தன்னையும் வென்றான் அவன்
பகைகொண்டு குகைதன்னில்
கன்றையொளித்தான்
பசுவுக்கும் கன்றாக ஆனான் பசுவை
பாலிக்கும் பாலகோபாலனும் ஆனான் (தீராத)

5. தக்கத் திமிங்கிடத் தத்தோம் - தத்தத்
தீம்தகிட தீம்தகிட தீம்தகிட தித்தோம்
தக்கத் திமிங்கிடத் தத்தோம் தாளம்
தவறாமல் காளிங்கன் தலைமீது ஆட்டம் (தீராத)

6. அல்லிக் குளத்தருகில் ஓர் நாள் கண்ணன்
ஆங்கோர் மரக்கிளையில் அமர்ந்தேயிருந்தான்
துள்ளித் திளைத்திடும் பருவம் கொண்ட
துடியிடையார் துறைமூழ்கிட வந்தார் (தீராத)

7. ஆடை களைந்தேயெறிந்தார் பின்பு
ஆனந்தம் கொண்டேயப் பொய்கை புகுந்தார்
ஆடவர் கண்டால் நகைப்பர் என்ற
அச்சமும் நாணமுமங்கே மறந்தார் (தீராத)

8. நரம்பினை விட்டிட்ட யாழ்போல் அங்கு
நாணமேயில்லாத பெண்களைக் கண்டான்
அறந்தனை போதிக்க வேண்டி அவன்
ஆடைகளைக் களவாடியே சென்றான் (தீராத)

9. உடைகளைத் தாருங்கள் என்றே, அங்கு
ஒருவர்க்கு ஒருவரே உடையாகி நின்றார்
உடைகளைப் பெறவேண்டுமென்றால் நீங்கள்
ஒவ்வொருவராகவே வணங்குங்கள்
என்றான் (தீராத)

10. அழகின் அகங்காரம் மறைய, அங்கு
அற்புதத் தூய்மையே யரங்கேற்றமாக
அழகிகள் ஆனந்தம் கொண்டார் அன்று
ஆடைக்கும் அழகுக்கும் நெருக்கத்தைக்
கண்டார் (தீராத)

11. ஏன் இங்கு வந்தனை என்றால் எனது
இல் என்று எண்ணியே வந்தனன் என்றான்
பானையிலே தேடியது என்ன-எந்தன்
பசுங்கன்றை காணாது தேடினேன்
என்றான் (தீராத)

12. கல்மாரி கண்டே கலங்கி அன்று
கண்ணா கண்ணா எமைக் காத்தருள் என்றார்
கல்லாலே கல்மாரி காத்தான் அங்கு
கற்பகத்தருவாக பூமியில் பூத்தான் (தீராத)

13. மாயச் சகுனியின் சூழ்ச்சி விளைவு
மங்கை ஒருத்தியின் மானத்தின் வீழ்ச்சி
மாயனே காத்தருள் என்றாள்
மங்கை மணிவண்ணனருளாலே மனமே
மகிழ்ந்தான் (தீராத)

14. ஆடை கொடுத்தனன் இன்றே அவனே
ஆடையெடுத்தே மறைத்தனனன்றே
ஆடையாய் நின்றவன் கண்ணன் அதனை
அறிந்திடில் அவனன்றோ அனைவர்க்கும்
மன்னன் (தீராத)

15. படையெடேன் பாரதப் போரில் - நான்
பஞ்சவர்க்குதவுவேன் அஞ்சேல் என்றானே
படையெடுத்தேகினான் அன்றே - பாட்டன்
பீஷ்மன் சொல் பழுதாகக்கூடாது என்றே (தீராத)

16. சாரதியாய் தேரிலே நின்றான் அன்று
சத்தியத் தூதனாய் சாதனை செய்தான்
பாரதியின் வீட்டுக்கும் வந்தான், பின்பு
பால்மோரும் பக்குவமாய் வாங்கியே
தந்தான் (தீராத)

17. வெள்ளித் திரையாகி நின்றான் அதில்
வெவ்வேறு காட்சிகள் தோன்றவும் செய்தான்
துள்ளிடும் மீனினைப் போலே நீரில்
தோய்ந்தாலும் நீர் தன்மேல் தோயாது
வாழ்ந்தான் (தீராத)

18. புனலுக்குள் கனலாக ஆவான் பொங்கும்
பொய்மைக்குள் மெய்மையாய் புகுந்தே இருப்பான்
மணலுக்குள் மறைந்திட்ட வித்து மாயன்
மனதுக்குள் மகிழ்வூட்டும் மாயாத சொத்து (தீராத)

19. வாராது வருகின்ற பிள்ளை அவன்
வந்தாலும் அதை நாமும் உணர்வதுமில்லை
தீராத தொல்லை தந்தாலும் அவனைத்
தேடாத மனமெங்கும் நான் கண்டதில்லை (தீராத)

20. தீராத நோய்க்கும் மருந்து கண்ணன்
தித்திக்கும் சரிதத்தை தினமும் அருந்து
சேராத பயனெல்லாம் சேர்ப்பான் நம்
ஜென்மமும் மரணமும் இல்லாது தீர்ப்பான் (தீராத)

# அற்புதமே வகுளாரண்யமே!

1. இராமனை யெண்ணி மகிழ்ந்திடு நெஞ்சதில்
காமமழிந்து தெளிந்திடுமே
பூமகள் நாதன் புரிந்திடு நன்மையை
புன்மையேன் நாவும் புகன்றிடுமோ
தேனமர் பொய்கையில் மீனினம் துள்ளிட
தென்னையும் தென்றலும் சூழ்ந்திடவே
வானவர் கைதொழ வண்டினம் ஆர்த்தெழ
வாழ்த்தொலி சூழ் வகுளாரண்யமே.

2. காம மிகுந்தெழில் கானமடைந்தவள்
காதலி தன்னைப் பிரித்திடவே
சேமமழிந்து நற்தேசு மகிழ்ந்திட
காமன் கணைகள் கலக்கிடவே
கோமளவல்லிய சோகவனந்தனில்
கோதண்டராமனை எண்ணினளே
கோல எழில்மிகு கன்னியர் வாழ்த்திட
கோலம் கொண்டான் வகுளாரண்யமே.

3. நெஞ்சில் நினைந்திடு வண்ணம் உருப்பெறும்
வஞ்சகர் தஞ்செயல் அஞ்சினளே
பிஞ்சு மனத்தவள் பேரருளானவள்
அஞ்சு மனத்தவள் ஆகினளே
அஞ்சன வண்ணனை பிஞ்சு விரல்களில்
அஞ்சிறையாக்கி அணைத்தனளே!
அஞ்சுவர் வஞ்சகர் அல்லவர் கெஞ்சுவர்
அற்புதமே வகுளாரண்யமே.

4. கண்டவர் கண்கல் இமைத்திலர் காரேரளி
கண்டவர் கண்களில் நீர்மிகுமே
கண்டவர் கையில் விளங்கிடு வில்லது
காண்பவர் துன்பம் துடைத்திடுமே
கண்ணெனக் கொண்டிடும் தம்பியைக் கொண்டவர்
கண்ணழகால் புவியாளுகிறார்
கண்ணிதுவாம் என வைணவர் கூறுவர்
கண்ணிதுவே வகுளாரண்யமே.

5. மாறன் மழை முகிலாகிப் பொழிந்திட
மாமுனிக் குன்றினில் வீழ்ந்திடவே
மாமணற்கால் நம்பி உய்யக்கொண்டார் என
மாறில்லருவியா றாகியதே
ஆளவந்தார் நமையாள வந்தார் அந்த
ஆற்றினிலே ஒரு காலெனவே
மீளவந்தார் நமை மீட்கவந்தார் நமை
மீட்கவைக்கும் வகுளாரண்யமே.

6 கண்கள் மகிழ்ந்திடக் காலென வந்தவர்
காசில் நம்பியென்னும் பெயரினரே
கண்'கள்' எனத்தகும் காவியுடையணி
கார்முகில் ஏரியாயாகியதே
கார்முகில் வண்ணனும் காத்தனன் ஏரியைக்
காத்தனனே நமைக் காத்தனனே
சீர்மிகு வைணவ நன்னெறி யோங்கிட
சீர்மிகு நல் வகுளாரண்யமே.

7. தாயுரை கொண்டு நடந்தனை கானகம்
தம்பியும் தாரமும் சூழ்ந்திடவே
வாயுரை யொன்று முரைத்திலை வாழ்க நீ
வள்ளலெனத் திகழ் வாமனனே
பேயவள் தாடகை பிள்ளைகள் மற்றுள
பேய்மனம் கொண்டவர் வீழ்ந்திடவே
தூயவனாகினை தொல்புகழ் காத்தனை
துன்பமுண்டோ வகுளாரண்யமே.

8. கங்கை நதித்துறை நாயகன் தன்னுடன்
காய்கதிர் செல்வனும் வீடணனுமே
பங்கயக்கண்ண நின் பக்கலில் தம்பியர்
பார்புகழும் பதம் பெற்றனரே
எங்கள் நகர்க்கிறை கும்பினி காவலன்
கண்கள் களித்திட நின்றவனே
எங்களையும் பொருளாக்கிட வந்தனை
என்றுமுள்ளாய் வகுளாரண்யமே.

9. கைகளும் தாமரை கால்களும் தாமரை
கண்களும் தாமரை கமலமுகம்
கைகள் குவித்துனை கண்டு வணங்கிடில்
காண்பவர் கண்களில் நீர்மிகுமே
என்று நீ வந்தனை எப்படி உள்ளனை
என்பதுபோல் ஒரு பாவனையே
எந்தன் மனத்திடை வந்து புகுந்தனை
என்றுமுள்ளாய் வகுளாரண்யமே

10. சங்குகள் தங்கிடும் முன்கையள் நங்கைதன்
கொங்கைகள் தங்கிடும் கொற்றவனே
மங்கையின் புன்னகை கண்டு மகிழ்ந்தனை
மண்ணுலகில் இனி என்னகுறை
தங்கிய வில்லுடன் தம்பியும் கண்டபின்
தாழ்விலையே தவ நாடடைவோம்
இங்குனைக் காண்பவர் எங்கிதுபோல் என
ஏங்கிடச்செய் வகுளாரண்யமே.

# எடுப்பார் கைப்பிள்ளை - I

தேவதேவன் தேவகிக்கு மைந்தனாகினான்
தெய்வமாக சங்கு சக்ரகதைகள் தம்முடன்
பாவபூமிச் சிறையில் தோன்றி பாவம் போக்கினான்
பயந்தவர்கள் பயத்தைப் போக்கும் பாதை காட்டினான்.
பொக்கைவாயும் புன்சிரிப்பும் எங்கு சென்றதோ !
பொலியும் வெற்றுக் கையும் காலும் காட்டக்கூடாதோ !
பத்துமாதம் பெற்றதுன்பம் பலன் அளிக்கையில்
பத்மநாப! பயத்தைப் பெற்ற பாவியாகினேன்.
கம்சன் என்ற கஞ்சன் செய்த காரியத்தினால்
வம்சம் ஏழும் வற்றிவிட்ட வாதை தன்னிலே
ஹம்சமான ஆதிதேவ! அனலை வீசியே
அபலையென்னை அலைக்கழித்தல் நியாயமாகுமா?
என்ற தாயின் எதிரில் ஈன்ற - குழவியாகினான்
எதுவும் அறியா மழலையாகி இனிது நோக்கினான்
எம்பிரானின் எளிமை தன்னை இயம்பலாகுமோ!
எடுப்பார்கையில் பிள்ளையாவான் மறுத்தல் கூடுமோ!

# எடுப்பார் கைப்பிள்ளை - II

கோகுலத்தை நோக்கிவந்தான் கண்ணன் - மன
வியாகுலத்தைப் போக்குவதில் மன்னன்
ஆகுலத்தையன்றி அறியாத - அன்புக்
கோகுலத்தார் நெஞ்சைக் கொள்ளை கொண்டான்
(கோகுல)

கோலமயிற் பீலி அசைந்தாடும் - கொழுஞ்
சோலை மலர்த்தென்றல் இசைபாடும்.
மாலவனின் வேய்ங் குழலின் நாதம் - அது
மங்கையரை மயக்கிடும் நல்வேதம் (கோகுல)

காற்சலங்கை யோசையதைக் கேட்டு
கண்ணன்தான் எனவே கண்டுகொண்டாள் கன்னி
பாற்குடத்தைத் தூக்கி எறிந்திட்டாள் - அவள்
பாலகனை தூக்கிக் கொள்ள வந்தாள் (கோகுல)

ஏற்கனவே எத்தனையோ பெண்கள் - அவனை
ஏற்றிடவே போட்டியிட்டார் என்ன செய்வான் கண்ணன்
நாட்குறித்தான் நங்கையனைவர்க்கும் - அவரும்
போய்க் குவிந்தார் பொய்மையெலாம் விட்டு (கோகுல)

பூரணமாய் வெள்ளிநிலாப்பூச்சு - அங்கே
பொான் மலர்கள் மலர்ந்திருக்கும் காட்சி
நாரணனாய் கண்ணன் கைகோர்த்து - அந்த
நாரியர்கள் பக்கலிலே ஆட்டம் (கோகுல)

ஆட்டுவிப்பான் ஆடிநின்றான் இங்கே - பெண்கள்
கூட்டமதைக் கூட்டிவிட்டான் இன்றே !
மீட்டுவித்தான் மோகனத்தை நன்றே - மீண்டும்
ஈட்டி நின்றார் ஈறில்லின்பம் அங்கே (கோகுல)

எத்தனைபேர் பெண்கள் அங்கு உண்டோ<br>
அத்தனை பேர் பக்கலிலும் கண்ணன்<br>
இத்தரையில் இப்படியோர் விந்தை !<br>
இனித்திடுமே நினைத்திடுவோர் சிந்தை (கோகுல)

ஒவ்வொருவர் நெஞ்சினிலும் கண்ணன்<br>
ஊற்றெனவே உறைந்திருக்கின்றானே !<br>
ஒருவருமே உணரவில்லை இஃதே !<br>
ஓர்ந்தவர்கள் உயர்ந்தவர்களாவார் ! (கோகுல)

நங்கையரின் கைப்பிடித்தான் நம்பி - அங்கே<br>
நாட்டவர்கள் யாருமில்லை தம்பீ !<br>
பொங்கிடும் நற்றூய அன்பே சாட்சி,<br>
பொய்மையிலார் போகமெலாம்<br>
பெற்றிடுவார் காட்சி (கோகுல)

ஏதுமிலார் தம்மிடையே நின்றான் - அவன்<br>
எம்பெருமான் என்றுமுளான் இனியன்<br>
எடுப்பவர்தம் கையில் அவன் பிள்ளை<br>
ஈடு எடுப்பே அவனுக்கில்லை (கோகுல)

## 101

# எடுப்பார் கைப்பிள்ளை III

வந்த இடம் சொந்த இடம் ஆவதா
வள்ளல் அவன்! வாழ்ச்சி பெற்றாள் (அ) சோதையார்
எந்த இடம் ஆயிடினும் எம்பிரான்
தந்தருள்வான் நல்லருளே நிச்சயம்
நந்தன் மனை வந்தவனே சொந்தமாய்
நாளும் பல லீலைகளைக் காட்டினான்,
அன்றொரு நாள் நாவழித்தாள் அன்னையே
அங்கு கண்டாள் அனைத்துலகும் விந்தையே
என் மகனா ! இல்லை ! அவன் தேவனே !
என்றவளே எண்ணிடுமுன் பாலகன்
ஒன்று மறியாதவனாய் விழிக்கிறான்
உற்றவளும் உச்சிமோந்து அணைக்கிறாள்
எம்பெருமான் என்றும் - அன்பர் கைப்பிள்ளை
இதை அறிந்தார் துயருறவே வாய்ப்பில்லை.

# எடுப்பார் கைப்பிள்ளை IV

எடுத்தாள், அணைத்தாள், முலைப்பால் கொடுத்தாள்
சுவைத்தான், முலைப்பால், விடந்தான் உணர்ந்தான்
விடுத்தான் விடத்தான் அறிந்தான் சினந்தான்
உரிந்தான் அனைத்தும் வியர்த்தாள் விடத்தாய்
இழந்தாள், இளைத்தாள், மெலிந்தாள், விழுந்தாள்
அழிந்தாள், அறிந்தாள், அவன்தாள், பிடித்தாள்
முதற்றாய் பயந்தாள் முலைப்பால் மறந்தாள்
இதத்தாய் இளைத்தாள் இவன் யார்? திகைத்தாள்
இவள் "தாய்" எனத்தான் நினைத்தாள் கொடுத்தாள்
அவன்தான் சுவைத்தான் அருள்தான் அளித்தான்
உடல்தான் விடுத்தாள் மணத்தால் மணந்தாள்
உளத்தான் அவன்தான் உயர்ந்தாள் இவள்தாய்
எடுப்பார் தமக்கே உகப்பாய் இருப்பான்
இவன்போல் ஒருத்தன் இனியார் கிடைப்பான்?

103

# எடுப்பார் கைப்பிள்ளை V

உயர்வற உயர்நலம் உடையவன்
மயர்வற மதிநலம் அருளினன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி
ஐயோ! அர்ச்சுனன் சாரதி!
விடு! விடு! விடு! விடு! தேரினை
விசயனும் வீரமாய்க் கூறினான்
வடுஇலா வைகுந்த நாதனும்
படைஇடைக் கொண்டு நிறுத்தினான்
பார்த்தனன் பார்த்தனும் பதறினான்
பாசவலைக்குளே திணறினான
கார்த்திரள் மேனியான் கண்ணனும்
கண்ணீர் மாற்றியருளினான்.
எல்லாச் செயலும் விட்டிடு
என் ஒருவனையே பற்றிடு
எல்லாப் பாவமும் போக்குவேன்
இல்லை கவலை இன்பமே!
எல்லா உலகும் தானென
எடுத்துக் காட்டிய நாதனே
அமர்ந்தான் அருச்சுனன் தேரிலே
அடடா! இவன் போல் யாரினி?
பட்டான மேனியில் காயங்கள்
பார்க்கலாம் அல்லிக் கேணியில்
பரமபதத்து நாதனே
பார்த்தனுக்கிங்கு தூதனே
பரமா! நிந்தன் எளிமையே
பணிந்தோம் பணிந்தோம் இனிமையே
எடுப்பார் கைப்பிள்ளை - என்றும் நீ
மறுப்பார் எவரினி! - மாதவா!

# எடுப்பார் கைப்பிள்ளை VI

கர்ணன் ஆவி கலங்கியது
கண்கள் பஞ்சடைகின்றனவே
கண்ணன் அந்தணனாகினான்
கர்ணனிடம் யாசிக்கிறான்!
கொடுக்கும் நிலையில் அவன் இல்லை
கொடுக்கக்கூடிய தெதுவும் இல்லை
இருந்தும் இல்லை என்று சொல்ல
இதயம் வருந்திட ஒளிபெற்றான்
எந்தன் நல்வினை உண்டென்றால்
எம்மோய்! எல்லாம் எடுத்தருளும்
உயிரை எடுக்க வந்தவன் தான்
உருகியழுது திகைக்கின்றான்
புண்ணியம் பெற்ற புண்ணியனும்
புனிதனாய்க் கர்ணனை ஆக்கிவிட்டான்
எதிரிகள் அவனுக்கு எவருமில்லை
எடுப்பார் கையில் பிள்ளையவன்

★

105

# எடுப்பார் கைப்பிள்ளை VII

கண்ணைப் பறித்திடும் மின்னல்;
ககனம் கனத்திடும் கொண்டல்;
விண்ணைத் தொட்டிடும் அலைகள்;
விஞ்சிடும் வெள்ளம் விரைவாய்
கார்னல் பிளேசுக்குக் கவலை,
காப்பது எப்படி கரையை?
கரைமேல் நின்றார் கார்னல்
கவலை மனதைக் குடையும்?
இறைவன் இராமன் கோயில்
இருந்தது அருகில் கண்டார்!
இறைவா இரங்கியருள் செய்!
இறைவியின் ஆலயம் அமைப்பேன்.
நடந்தார் கும்பினி "கலைக்டர்"
நள்ளிருள் தன்னில் நனைந்தே
கண்டார் அற்புதக் காட்சி
கல்வெட்டு இன்றும் சாட்சி
கரையைக் காத்தனன் இராமன்
கார்னல் கண்களில் வெள்ளம்
கட்டிக் கொடுத்தார் கோயில்
கனகவல்லிக்கு அன்றே!
இரப்பவன் இனத்தை இறைவன்
என்றுமே பார்த்தது இல்லை!
எடுப்பார் தம் கையில் பிள்ளை
இதுதான் அவனருள் எல்லை!

# எடுப்பார் கைப்பிள்ளை - VIII

வேண்டியும் வேதங்கள் காணவில்லை
விருப்பும் வெறுப்பும் அவனுக்கில்லை
விதுரன்குடில் செய்தபேறு என்னே!
வீடுமன், வீட்டைப் புறக்கணித்தான்
வில்லாசான் துரோணனும் ஒதுக்கப்பட்டான்
அதிரதர் மாரதர் அனைவருமே
அதிர்ந்தனர் அவனது செயலதனால்;
அற்றது பற்றெனில் அவன் வருவான்
ஆனந்த வீட்டினை அவன் தருவான்
என்மனை என் மனை என உரைத்தார்
எண்ணத்தில் சிறுத்ததால் அவன் மறுத்தான்
நின்மனை, நின் மலா! நீயருள்க!
தன்மனை கண்டவன் தழதழத்தான்
நெஞ்சகம் புகுந்தவன் நேயனவன்
கஞ்சியும் இனித்திடும் கண்ணனுக்கு
அஞ்சுதல் தேவையோ அன்பர்கட்கு
ஆண்டவன் அன்பரின் அன்புக்குள்ளே.

# 107

# எடுப்பார் கைப்பிள்ளை - IX

ஏழை அந்தணன் வருகின்றான்
எலும்பும் தோலும் கொண்டங்கே
இருபத்தேழு குழந்தைகளை
ஈன்றெடுத்தவளின் கணவனவன்
வறுமை காட்டும் அவன் ஆடை
வையம் மறந்த நினைவோடை
இளமைக்கால நினைவலைகள்
ஏழை நெஞ்சம் எதிரொலிக்க
துவரைப் பதியான் மனை புகுந்தான்
தூய மறையோன் குசேலமுனி!
தாயைக் கண்ட சேயானன்
தண்கதிர் கண்ட மலரானான்
தாமரைக் கண்ணன் மறையவனை
தானே விரும்பி உபசரித்தான்
இருநான்காண்டு மழை காணா(த)
இருநிலம் மழையில் தளிர்த்தது போல்
அருமை நண்பன் தனை ஏற்றான்.
அரையில் அவல் முடிச்சது கண்டான்
தானே வலிந்து அதை எடுத்தான்
தாமரை இதழால் சுவைத்திட்டான்
தேனே! சுவையில் அஃதென்றான்!
தேவனாய் நின்றான் திருமறையோன்
கேட்க வந்ததைக் கேட்கவில்லை
கேசவன் தானே அருள் செய்தான்
எடுத்து வைத்ததைக் கொடுக்கவில்லை
எடுத்துக் கொண்டவன் எம்மிறைவன்
எடுப்பார் கையில் பிள்ளையவன்
என்றும் இல்லை தொல்லைகளே,

## 108

# எடுப்பார் கைப்பிள்ளை - X

கண்ணன் இன்னும் வரவில்லை
கலங்கி நிற்கிறாள் கன்னியவள்
பீஷ்மகன் பெற்ற தவப்புதல்வி
பெண்களுக்குள்ளே பேரழகி
மண நாள் நாளை, மயங்குகிறாள்
மணமகனாக சிசுபாலன்
மனத்தில் உள்ளவன் மணிவண்ணன்
பெற்றோர் விருப்பம் முன்னதுவே
பெண்ணவள் விருப்பம் பின்னதுவே
என்ன செய்வாள் (உ)ருக்குமணி?
ஏழை அந்தணன் தனை யழைத்தாள்
ஏடு கொடுத்து தூது விட்டாள்
எம்பெருமானே என் செவியால்
எழிலாம் நின் குணம் பருகியவள்
ஏற்றம் பெற்ற வேள்வி அவி-எனை
எச்சில் நாய்முன் இடலாமா?
காத்திருந்தேன் நான் கண்ணனுக்காய்
கண்டவர் கையில் கலங்குவதா?
காந்தருவம் எனும் முறை தன்னால்
கைப்பிடித் தேயெனைக் காத்திடுக
துவராபதியான் துடித்திட்டான்
துடியிடையாள் நகர் அடைந்திட்டான்
துர்க்கைக் கோயில் வழிபாட்டில்
தோய்ந்திருந்தவளை மீட்டிட்டான்
மணமகள், மணிவண்ணன் தேரில்
மன்றல் முடிந்தது துவாரகையில்
எடுப்பார் கையில் பிள்ளையவன்
எண்ணப்படியே ஏற்றருள்வான்.

# எடுப்பார் கைப்பிள்ளை - XI

கொள்ளையடித்திட வந்தவன் தான் தன்னைக்
கொள்ளையிடும்படி செய்துவிட்டான்
வெள்ளை உள்ளம் கொண்ட கள்ளனவன் வாளால்
வெருட்டி நகையெலாம் கொள்ளை கொண்டான்
எட்டும் வரை அவன் எடுத்துக்கொண்டான் ஆங்கே
எட்டாத ஒன்றினை எட்டவில்லை
எட்டுக்குரியவன் எடுத்து உணர்த்திட
எட்டாம் மறைப்பொருள் எட்டிவிட்டான்
எட்டியதை அவன் எட்டு திசையிலும்
எட்டவைத்தான் நமக்கெட்டும்படி!
வாளை எடுத்தவன் காதில் மறைப்பொருள்
வார்த்து அருள் செய்தான் வாமனனே
நாளும் அடியவர் நாவுக் குணவினை
நல்கவே கொள்ளை அடித்தவனை
நாளும் அடியவர் நாவுக் குணவினை
நாமமதாகவே கொண்டிடவே
நாரணன் காட்டிட நரன் அவன் கொண்டனன்
நானிலமெங்கிலும் நாட்டினனே
காரணன் ஆனவன் கைமாறு வேண்டிலன்
கலியனுக்கங்கருள் செய்தனனே
கலிகெடச் செய்தவன் கைப்பொருள் விட்டவன்
மெய்ப்பொருள் காட்டினன் மேன்மையுற
எடுப்பவர் தமக்குமே எடுத்தருள் செய்பவன்
எடுப்பார் கைப்பிள்ளையே எம்பெருமான்!

# ஸ்ரீ சுதர்சநாஷ்டகம்

—※—

(ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகனால் அருளப்பெற்ற
துதியின் தமிழாக்கம்)

1. எதிரணியர்கட்கு அச்சமே
எழிற்குண நலன்கள் உச்சமே
பிறவிப்பிணி தீர்க்கும் ரட்சக
பிரபஞ்சம் நிலை நிற்கும் அச்சு நீ.
சகல வினையாவும் தீர்ப்பவ
சதுர்மறைகள் காட்டும் தர்மமே
வெற்றி வெற்றி திருவாழியே
வெற்றி வெற்றி திருவாழியே

2 இனிய உலகோனின் எழிலணி
இமையோர் பயம் போக்கியருள்பவ
சதமன் பிரமன் போற்றும் பெரியவ
சதபதம் தன்னில் நிறைபவ
புகழும் அறிஞர் தம் உறவு நீ
போற்றும் அரன் கண்ட புனிதன் நீ
வெற்றி வெற்றி திருவாழியே
வெற்றி வெற்றி திருவாழியே

3. ஒளிரும் மின்னலதன் பொன்னனே
ஒன்றுபட்ட சுடர்க் கூட்டமே
திகழும் திருமேனி கொண்டவ
திறனுடையார்கட்கும் மறைபவ
குறைவிலாயு தங்கள் கொண்டவ
கொண்டவடியார்கள் காப்பவ
வெற்றி வெற்றி திருவாழியே
வெற்றி வெற்றி திருவாழியே

4 பணியுமடியார்கள் குழுவினோய்
பயிலுமாறு குணம் தழுவினோய்
புலன்கள் புகழ்கொண்ட பெருமையோய்
புகழும் பரம் வ்யூஹ உருவினோய்
சதமகப்பகையின் பகைவரே
சரமாய் சுரன் கொன்ற துணைவரே
வெற்றி வெற்றி திருவாழியே
வெற்றி வெற்றி திருவாழியே

5\. அசுரர் வாழ்ச்சியை அறுப்பவ
அந்த காரமதின் தினகர
அசுர மாயையை யழிப்பவ
அடியார்மருள் நீக்கி யருள்பவ
அமரர்களுகந்த ஆரிய
சமரதில் சிறந்த வீரிய
வெற்றி வெற்றி திருவாழியே
வெற்றி வெற்றி திருவாழியே

6\. முன்னும் பின்னும் அடிவைத்தவ
முழுதும் ஆயுதங்கள் சூழ்பவ
மன்னும் மாயைதனைக் கொன்றவ
மலரும் மாலைகளைக் கொண்டவ
மன்னும் பொறியாகி நின்றவ
மாறிலாக் கருணை கொண்டவ
வெற்றி வெற்றி திருவாழியே
வெற்றி வெற்றி திருவாழியே

7\. ஞானியர்க்கு மோக்கம் அருள்பவ
நவிலும் ஆறெழுத்தில் வாழ்பவ
நான்கொடிரு கோணம் அமர்பவ
நானிலப் பொருட்குள் உறைபவ
தான் உகந்த செயல் புரிபவ
தானவர் உகந்த கற்பகம்
வெற்றி வெற்றி திருவாழியே
வெற்றி வெற்றி திருவாழியே

8. உலகக் கண்ணான வேதமே
ஒளிரும் வேள்வி முத்தீபமே
உயர்வற விளங்கு ஞானமே
உலகே. உமக்கெதுவும் ஆகுமே
அளவில் வினையாவும் போற்றுமே
அழியும் அச்சம் பிணியாவுமே
வெற்றி வெற்றி திருவாழியே
வெற்றி வெற்றி திருவாழியே

9. எட்டுடைத்துதி இது எல்லாம் நிறைந்தது
மட்டிலாப் புகழோன் வேங்கடநாதன் தன்
பட்டறிவின் பயனிது படிப்பவர்க்கெல்லாம்
தட்டெதுமின்றியே சார்வது நன்மையே.

(கவிஞரின் ஐம்பதாவது பிறந்த நாள் கடுக்கலூரில் நடைபெற்ற போது ஆசிரியரால் வெளியிடப்பட்டது)

# ஸ்ரீ ந்ருஸிம்ஹாஷ்டகம்

(மொழி பெயர்ப்பு)

1. மாசில் ஒளி கூடிவரும்கோடி மதிபோலே
மங்கையுடன் மாலழகன் ஒளிருமிவன் பிடரி
பாவமதில் மூழ்கும் எனை காத்தருளும் பரிவே
பரிவில் பகை மடியவருமறலி நரசிங்கா.

2. பாதம்பணி பாவிகளின் பஞ்செனும் வினைக்கு
பாவனனே, நீர் பறவைக் கொடியமரும் பரமன்
பாடுமடியார்கள் துயர் தீர்த்தருளும் தேவே
பரிவோடெமைப் பாலித்திட வேண்டும் நரசிங்கா.

3. பத்து நகம் கொண்டவுணன் மேனிபிளந்திட்டாய்
பரம திருமேனியெலாம் பவள நிறமாச்சு
பண்டிதர் மனத்துறையும் மாலே மலர்வாழும்
மங்கை மனம் வாழ்பவரே மாய நரசிங்கா.

4. விண்ணவர் முடிக்கழகு செய்த மலர்ப்பாத
விளங்குதவ யோகியர் மனத்துறையும் மாலே
வேத முடிவான மறைமீதமரும் நாத
விளங்குமிரு திருவடிகள் எந்தன் முடிமீதே.

5. வந்தடி பணிந்தவரை வாழ்த்திடு மகத்தாய்
நொந்த உடல் ஐம்புலன்கள் நோவுபடும் பேசது
வந்திடுக புள்ளதன்மேல் வல்லியுடன் என்முன்
கந்தமிகு கமலமலர்க் கண்ணழகா வா, வா.

6. ஆடக்கிரீடமுடன் ஆரம் மணிமாலை
அரையணியும் கௌத்துபமும் குண்டலங்கள் மின்னும்
சேதன மசேதனங்கள் வாழும் திருமேனி
பேதையிவன் நெஞ்சிலிடம் பெற்றிடவே வேண்டும்

7. கதிர்மதியம் கனல்ஒளிரும் கண்கள் ஒரு மூன்று
கரமதனில் ஒளிரும் சுடராழி மலர்மார்ப
துதியுதிரும் வதனமுடை தேவர்களின் தேவே
தூயவனே எனது மனம் என்று முனையெண்ணும்

8 மாதவ முகுந்த மதுசூதன முராரே
வாமன! வரங்கள் தரு கற்பகமே தேவே
காணும் பொருள்தோறும் கருக்கொண்ட நரசிங்கா
காலமெலாம் நின் நினைவில் யான் கழிக்கவேண்டும்

9. பாவங்களழிக்கும் துதிப்பாடல் இருநான்கும்
பாசம் பிணிபாதக மனைத்தையும் விலக்கும்
பாரென விளங்கும் பரந்தாம நரசிம்ம
பாடல் இவை வல்லவர் நற்பதமடைவர்மாதோ.



# கோபிகாகீதம்

(தழுவல்)

1 எங்கள் பூமியே எதையும் விஞ்சிடும்
தங்கள் அருளினால் தங்கமானது
இந்திராதியர் இங்கு தங்கினர்
உந்திறத்திலே ஊன்றி நின்றனம்
எங்கும் தேடினோம் எங்கள் ஆவியே
தங்கப்பார்வையால், கண்ணா, தளிர்க்கச்செய்யுமே

2 குளிர்ந்த ஏரியில் மலர்ந்த தாமரை
குலவும் இன்பமே விழிக்குத் தோற்குமே
அருளும் ஆழியே, அடிமை நாங்களே
அடித்தழச்செய்யும் ஆட்டம் வேண்டுமா
கருணைத் தெய்வமே கண்ணா! கரந்து நிற்கிறீர்
கற்பகம் எனக் காத்தருள்கவே.

3. வீரமானவ, விருப்புடன் எமை
காளியன் அகன் காற்று மழையென
கோரமான தீ தாக்கிடாமலே
ஈரமானவ என்றும் எம்மையே
காத்து நிற்கிறாய் கண்ணா, கலக்கம் தீரவே
கவலையில்லையே, கவலையில்லையே

4. என்றும் நண்பனே எதிலும் உறைந்திடும்
நல்ல சாட்சி நீ, நந்தன் பாலனோ,
எந்தை தந்தைதன் தந்தை வேண்டினான்
யதுகுலத்திலே கண்ணா வந்து தோன்றினாய்

5. இனிய இனிமையே எங்கள் முடியிலே
இனிய இலக்குமி உகந்த திருக்கரம்
தனைப் பதித்திடும் தாள் பணிந்தனம்
தணலென எமை, கண்ணா, தகிக்கும் வாழ்க்கையே

6. கோபியர் துயர் போக்கிடும் எழிற்
கோபியர் மனக்கொண்டல் வண்ணனே
கோலப் புன்னகை கொண்டு யாரையும்
கொல்லுகின்றனை கொள்ளுகின்றனை.
ஏற்றுக்கொள்ளும் நீர் கண்ணா எங்கள் சேவகம்
எழில் முகத்தினை இசைந்து காட்டிடும்

7 துயரறுத்திடும் தூய்மை கொண்டிடும்
திருவிரும்பிடும் திருவடியினை
உரகந்தன்னிலே உகந்து ஆடிய
ஒப்பிலாத நல் உயர்பதம் தனை
அருளவேண்டுமே கண்ணா, நெஞ்சகத்திலே
அழியவேண்டுமே எங்கள் அற்பம் யாவுமே

8 இறைவர் தம்மையும் ஈர்க்கும் சொல்லினோய்
இனிய இதழதால் எம்மைத் தேற்றுவீர்
என்றும் அடிமையாம் கண்ணா இனிய வீரனே
கன்றும் எமதுளம் காதற் பிரிவினால்

9. நினது சரிதையாம் அமுதப் பூம்புனல்
துயரம் போக்கிடும் தூய்மையாக்கிடும்
அறிஞரனுபவம் கண்ணா அகில மங்களம்
அகிலம் தழைத்திடும் ஆனந்தாமிருதம்

10. உயிரினாவியே உனது பார்வைகள்
உள்ளம் ஈர்த்திடும் புன்னகைகளே
எழிலாம் அசைவுகள் இதய இன்பமே
என்பும் குளிருதே உந்தன் இரகசியம்
என்றும் மனதையே கண்ணா ஈரமாக்குதே
எங்கள் இதயமே, காதல்நோவு கொள்ளுதே

11. கறவைகள் தமைக் காக்க வேண்டியே
கள்ளும் முள்ளுமே நிறைந்த காட்டிலே
கமலப் பாதமே நெஞ்சம் வேகுதே
காதற் தெய்வமே கண்ணா கருணை வெள்ளமே

12. அந்தி மாலையில் அனுதினமுமே
உந்தன் திருமுகம் ஒளிரும் தூசியில்
எங்கள் மனமெலாம் கண்ணா ஏங்குகின்றன
திங்கள் முகத்திலே எழிலாய்த்திரளும்குழற்றிரன்

13. தொல்லை தீர்ப்பவ துயராறுப்பவ
தூயபாதமே எமது நெஞ்சிலே
கமலவல்லியும் கண்ணா வணங்கும் பாதமே
காதற் தெய்வமே கண்ணா கருணை வெள்ளமே

14. இதய நாயக இனிய இனிமையே!
குழலின் இசையிலே குழைந்து நிற்கிறோம்
அதரமதுரசம் கண்ணா ஆனந்தாமிர்தம்
எதுவும் வேண்டிலம் கண்ணா உன்னையன்றியே

15. கனலும் காட்டிலே கன்றுடன் செல்லும்
காலைப் பொழுதெல்லாம் கணங்கள் யுகங்களே
மாலை வந்ததும் மகிழ்ச்சி பொங்குதே
மன்னன் மலர்முகம் மயக்கும் குழற்றிரன்
கண்டுவிட்டபின் கண்ணா, கதறுவோம்
கண்களின் இமை படைத்தவன் ஜடம்.

16. மெய்மை காப்பவ மென்மைக் கள்ளனே!
அடியார் காத்திடும் அச்சுதன் நீயே
ஊரை விட்டனம் உறவை விட்டனம்
உருக்கும் குழலிசை கேட்டு வந்தனம்
கருக்கல் நடுநிசி கண்ணா கதறி நிற்கிறோம்
கைவிடல் நன்றோ கண்ணா காதற் தெய்வமே

17. தவழும் புன்னகை தளிர்க்கும் கண்ணெழில்
திகழும் மார்பெழில் திகைக்கச் செய்யுமே
இதய அன்பினை ஈர்க்கும் மாயமே
இதற்கு மேலும் எம் கண்ணா இதயம் தாங்குமா

18. எங்கு செல்லுவோம் எவர் எம் உறவினர்
உலக நாயக உறவு நீயலால்
கங்குல் பகலெலாம் கண்ணனே உனைக்
காணத் துடிக்கிறோம் கவலை போக்கிடு
தங்கியருளுக கண்ணா தாபம் தீர்த்தருள்
தனித்த கோபியர் தம்மைக் காத்திடு

19 இனிய நாயக கண்ணா எழுந்தருள்கவே
இதயந்தன்னிலே இறைஞ்சுகின்றனம்
கொடிய கானகம் கொழுந்து பாதமே!
இனியும் தேவையா இதயம் வேகுமே
எமது நெஞ்சகம் கடினம் எஃகுதான்
கமலபாதங்காள், கருணை காட்டிடும்.

ஸ்ரீ :

# பிழை திருத்தம்

| ப.எண். | வ.எண். | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 17 | தபுலம்பல் | தன் புலம்பல் |
| | 22 | ரேகனார் | கோனார் |
| 14 | 20 | கற்றிடும்தோறும் | கற்றிடுந்தோறும் |
| 25 | 1 | மலின் பாதம் | மாலின் பாதம் |
| 32 | 5 | பானைக்குன் | பானைக்குள் |
| 34 | 1 | யாரிவன | யாரிவன் |
| 35 | 4 | தண்ணனியில் | தண்ணளியில் |
| 44 | 11 | உப்பிலா துண்டிடுவேன் | உப்பிலாது உண்டிடுவேன் |
| 45 | 12 | வீருப்பால் | விருப்பால் |
| 51 | 15 | பரப்பியான் | பரப்பியவன் |
| 56 | 9 | நட்பலப் | நட்பைப் |
| 72 | 15 | பிறக்காது | மறக் காது |

# நூலாசிரியர் பற்றி

திருமால் கவிச்செல்வர், கவிமணி
**திரு. எஸ். ரகுவீரன்**, எம்.ஏ., எம்.ஏ., எம்.எட்.,
மதுராந்தகம்.

※ ஸ்ரீ அஹோபிலமடம் ஓரியன்டல் உயர் பள்ளி, மதுராந்தகத்தில் தலைமையாசிரியர்.

※ தமிழில் எம் ஏ., காந்தியச் சிந்தனையில் எம் ஏ, எம். எட்., மற்றும் ராஷ்ட்ரபாஷா ஹிந்தி, அபிக்ஞ-சம்ஸ்கிருதம், தெலுங்குமொழி அறிமுகம்.

※ கும்பகர்ணன் உறங்கவில்லை திருப்பார்வை வினா விடைகள், இராமாயண வினா விடைகள் - தமிழ் & ஆங்கிலம், திறன் விளங்கு மாருதி, திருமால் நெறி வினா-விடைகள்; மற்றும் பல சிறிய வெளியீடுகள்.

※ தொடர்புடைய மன்றங்கள் : நிறுவனர் க.தி.அருள் மன்றம், மதுராந்தகம். (இருபத்தேழு ஆண்டுகளாக 135க்கு மேற்பட்ட வெளியீடுகள், 46கோடி ஸ்ரீராம நாமாக்கள் ஸ்தூபங்கள் 8, பயிற்சித் திட்டங்கள், இலவச உரை, கண்காட்சி)

2. கவிதைப் பண்ணை. வளர்பிறை வானொலி சிறுவர் சங்கம்.

3 இலக்கியச் சுடர்.

மற்றும் கம்பன் கழகம், வானொலி பட்டி மன்றம் கவியரங்கம், பஜனை ஸ்ரீ வைணவ மாநாடு பங்கு பெறல் & நண்பர்களுக்கு இவர் மதுராந்தகம் **கி. வா. ஜ.**